# காற்றுக் குதிரை

கவியரசர் இளந்தேவன்

வெண்ணிலவு பதிப்பகம்
28-A, ஆர்க்காடு தெரு
தியாகராய நகர்,
சென்னை-600 017.

# அணிந்துரை

## இலக்கியப் பேரறிஞர் வல்லிக்கண்ணன்

"கவிஞன் என்பவன் ஊருக்குத் தகுந்த நன்மையையும் தனக்குத் தெரிந்த உண்மையையும் சொல்கிறவன்."

இது கவிஞர் இளந்தேவன் வாக்கு, சமூகத்தைப் பற்றியும் நாட்டைப் பற்றியும் கவிஞன் கொள்கிற பார்வையை அவன் கவிதை எடுத்துக் காட்டுகிறது. சமூகத்தின் நிகழ்ச்சிகளிடையே மனசாட்சியின் குரலாக ஒரு கவிஞனின் வார்த்தைகள் ஒலிக்க முடியும்.

இந்த உண்மையை வலியுறுத்தும் உணர்ச்சிப் படைப்புகளாக விளங்குகின்றன இளந்தேவன் கவிதைகள்.

"இறைவன் வீட்டு முற்றத்திலேன்
இத்தனை பேதம் — இன்னும்
எத்தனை நாள் உயர்வு தாழ்வு
என்கிற வாதம்?"

என்று குமுறுகிற கவி உள்ளம் கொதித்துச் சொற்கனல் வீசுகிறது—

"நூறு சாதி நூறு நீதி
யார் வகுத்தது?—மன
நோயில் வந்த பாவம்
இங்கு யார் வளர்ப்பது?
வீறு கொண்ட பாரதத்தின்
சீர் கெடுப்பது—சாதி
விதையில் தீயை வைக்க
என்று நாள் குறிப்பது?"

'நாம் அனைவரும் ஓர் தாயின் மக்கள் என்று பாடுங்கள்!' என்று ஊக்கக் குரல் கொடுக்கும் கவிஞர் சாதி வளர்வதன் அடிப்படையைச் சரியாகச் சுட்டுகிறார்.

**''சாதியினால் வளர்வதெல்லாம் ஒன்றிரண்டு**
**தனி மனிதச் சுயநலங்கள்! போக்கில்லாத**
**பேதைகளின் தலைமை வெறிப்பித்தால் சாதிப்**
**பேய்களுக்குக் கும்மாளம் வீதிதோறும்''**

'கோவேந்தர் கால முதல் ஆட்டமிட்ட காட்டேரியாம் சாதி'யை எதிர்த்துச் சமயம் நேரும் போதெல்லாம் நாவலிக்கிறார் கவிஞர். உள்ளம்போல் தான் உயர்வு என்பதாலே தமிழ் உணர்வால் ஒன்றுபடத் தூண்டும் இளந்தேவன் உழைப்பின் உயர்வையும் எடுத்துச் சொல்கிறார் கவிதைகளில்—

**''பனி மலை வியர்க்கும் பொழுதினிலே**
**பாகீரதிகள் கருவாகும**
**மனிதர்கள் வியர்க்கும் பொழுதினிலே**
**மாபெரும் உலகம் உருவாகும்.''**

என்று அழகு மொழியில் ஊக்கம் ஊட்டுகிறார்.

சின்னக் காளான் கூட இம் முயற்சிக்கு வழிகாட்டும் குரு ஆகிறது கவிஞர் பார்வையில். காளானின் இயல்பை இனிய கவிதையாய் வர்ணித்து, பின் 'என்னால் என்ன இயலும்' என்று ஒதுங்க நினைக்கும் மனிதனுக்கு அறிவுறுத்துகிறார் இப்படி—

**'ஆல மரங்கள்**
**இருக்கிற போது**
**அடியேன் எதற்கு**
**என்று நினைக்கும்**
**தாழ்வு நெஞ்சம்**
**அதற்கிருந்திருந்தால்**
**தலை நிமிர்ந்திருக்குமா**
**சின்னக் காளான்!**

**நிழலைத் தேடி**
**ஒதுங்க நினைக்கும்**
**நினைப்புகளுக்குக்**
**கருத்தடை செய் நீ**

**நீள் புவி இதற்கே**
**நிழல் தருவேன் நான்**
**என்ற நினைப்பிலே**
**வேர்களை ஊன்று!'**

உலகம் தழுவும் விசால நோக்கு கவிஞருடையது. நம்பிக்கை ஊட்டும் குரல் அவரது. அதனாலேதான் 'தோற்காது மானுடம்' என்றும் 'கைகளின் ஆற்றலைக் கணக்கெடு' என்றும், 'முதலில் சிலர் மன ஊனத்தைப் போக்க உதவி செய்' என்றும் உணர்த்த முடிகிறது அவரால்.

**'உலகம் நமது! உறவினர் அனைவரும்**
**எட்டுத் திசையும் கைகளை நீட்டு!**
**அலாஸ்கா தொடங்கி ஆஸ்திரேலியாவரை**
**அனைத்து மக்களையும் அவை தழுவட்டும்!**
**வறுமைப் பனியில் வாடிய தோழர்க்குன்**
**கைகளினாலே கதகதப்பூட்டு!**
**உன்னை நம்பு! உறுதி உரைக்கும்**
**என்னை நம்பு! எல்லாம் வெற்றியே'**

என்று மனித நேயத்தையும் தன்னம்பிக்கையையும் வலியுறுத்துகிறார்.

இன்றைய சமுதாய இழிநிலையை அடிக்கோடிட்டுக் காட்டுகிறது இளந்தேவனின் 'மோனாலிசாவுக்கு முறுவல் சொல்லித் தந்தவளே!' என்ற கவிதை ஏழைச் சிறுமியின் சிரிப்பு என்ன அறிவிக்கிறது? எண்ணம் வளர்க்கிறார் கவிஞர்.

**'ஏழைத் தமிழ் மகளே**
**எதைப் பார்த்து நீசிரிச்ச?**
**பாரமுள்ள பை தூக்கிப்**
**பள்ளிக்கூடம் போறதெப்போ!**

**ஆத்தாளுக்குப் பிள்ளை தூக்க**
**அப்பனுக்குச் சோறு தூக்க**
**காத்திருக்கும் சின்னப் பொன்னு**
**கல்வி கற்கப் போறதெப்போ?**

**கனவுல தான் பள்ளிக்கூடம்**
**கற்பனையில் என் படிப்பு**
**என நெனச்சுச் சிரிச்சாயோ**
**இளங்காலைச் சூரியனே**
**சட்டை கிழிஞ்சிருந்தா**
**சடுதியிலே தச்சிடலாம்**
**சமுதாயம் கிழிஞ்சிருக்கே**
**தைக்கக் கொஞ்சம் நாளாகும்'**

ஏழைகளின் அவல நிலைக்கு இரங்கும் கவிஞர் 'ஏழை முன்னேற உழைப்பது தான் சமயம்' என உரைத்த 'ஞாலத்தின் புது ஞானி' விவேகானந்தரைப் போற்றிப் பாடுவதில் வியப்பில்லை. அந்த அழகுக் கவிதையில் அவர் போலித் துறவிகளின் தன்மையைச் சுவையாகச் சுட்டுவது ரசனைக்கு விருந்து.

**'ஒடுங்காத குழியென்னும் வயிற்றில் கொட்டும்**
**உணவுக்குப் பலர் துறவியானதுண்டு!**
**அடங்காத மனைவி தரும் அர்ச்சனைக்கே**
**அஞ்சியதாற் பலர் துறவியானதுண்டு!'**

**'கடன்காரன் தொல்லைக்குப் பயந்து தப்பக்**
**கடைசி வழி இதுவென்று துறந்தோருண்டு!'**

வாழ்க்கையின்—மனிதர்களின்—இயல்பை யதார்த்தமாய்ச் சித்திரிக்கும் கவிதை வரிகள் இவை.

நாட்டின் உயிர்ப்பிரச்சினையாக வளரும் காவேரி நீர்ப் பிரச்சினையை உணர்த்தி, உயர்ந்த சிந்தனையை முன் வைக்கிறது 'நடப்பாய் வாழி காவேரி!' எனும் அற்புதமான கவிதை.

நெல்சன் மண்டேலா பற்றியும், அம்பேத்கார் பற்றியும் தன் ஆற்றல் ஒளி வீசும்படி கவிதைகள் படைத்திருக்கிறார் இளந்தேவன்.

இவ்விதம் அகண்ட நோக்கில் எண்ண அலைகளைப் பரப்பி, சிந்தனை ஒளியைப் பிரதி பலிக்கும் கவிஞர், தத்துவப் பார்வையோடு சிந்தனையை தனக்குள் செலுத்தி ஞானக்கதிர்களைக் கண்டு, எடுப்பான முறையில் கவிதை களில் பொதிந்து தரும் செயலையும் ஆற்றலோடு புரிந்திருக்கிறார்.

'விடியல் என்பது
வெளியே இல்லை?'
'உள்ளுக்குள் விடிந்தால்
உலகுக்கு விடியும்
இது தான் விடிவு
என்பதென் முடிவு'

என்று அறிவொளி பரப்புகிறார் அவர். 'விடிவை நோக்கி' என்ற அக்கவிதை சில உண்மைகளை எழிற் சித்திரங்களாகக் காட்டுகிறது.

'கல்வி விளக்கோ
இருட்டின் அடர்த்தி
எவ்வள வென்று
காட்ட மட்டுமே
கை விளக்கானது'
'காதல் விளக்கோ
விடிவைத் தராமல்
வெளிச்ச முக்காட்டை
இருட்டுக்குப் போட்டு
வேடிக்கை பார்த்தது'.
'வெளிச்சப் பருப்பின்
கருப்புத் தோலே
இருள் எனும் விஷயம்!'

ர சிக்க வேண்டிய நயங்கள் இவை.

அதே போல 'உனது வசந்தம் வெளியே இல்லை என்ற கவிதையும் அக நோக்கு உயர் சிந்தனையைப் புலப்படுத்துகிறது.

'உனது வசந்தம் வெளியில் இல்லை
உணர வேண்டும் மனிதா!
மனித வசந்தம் என்பதென்றும்
மனதின் வசந்தம் மனிதா!'

ஊன்றி உணர்ந்து உண்மை அறிதற்கு உரிய உயர்ந்த சிந்தனை இது.

அதே போல, 'கனவு காணும் கனவுகள்' சிந்தனைக்கு இனிக்கும் சீரிய படைப்பாகும்.

கனவு பற்றிய சித்திரிப்புகள் நயமான விஷயங்கள். ஆசை தீட்டும் ஓவியம், உறக்கம் என்ற நாட்டிலே தோன்றிடும் விசித்திரம், மேடையற்ற நாடகம், நான் நடிக்கும் நாடகம்—நானே பார்க்கும் அற்புதம் என்றெல்லாம் கனவுக்கு விளக்கம் தருவது சுவையாகவும் நயமாகவும் உள்ளது.

'நிழல் எடுத்து நெய்ததோ?
நெருங்க ஓடும் கானல் நீர்ச்
சுழலில் ஓர் நீர்க்குமிழ்
சுற்றி மாயும் மாயமோ?'

என வியப்பது, ஆகா அற்புதம் என்று பாராட்டப்பட வேண்டிய பகுதி.

பூமியில் வாழ்க்கை கடவுளின் உள்ளக் கனவு; கனவில் போதை கொள்ளும் அந்தக் கடவுளும் கனவே என்று வேதாந்த தத்துவமாகக் கவிதையை முடிப்பதும் ரசமாகத் தான் இருக்கிறது. நல்ல கற்பனை.

'காலக் கிழவி ஒரு கைத்தறி நெசவுக்காரி'யும் கற்பனை நயம் செறிந்த நல்ல கவிதை.

'கருப்பு நூலை நீளவாக்கில் நீட்டி—ஒளிக்
கற்றை நூலைக் குறுக்கு வாக்கில் ஒட்டி
இரவும் பகலும் பாவும் ஊடும் ஆக்கி—நாள்
என்னும் ஆடை நெய்யும் கூனிப்பாட்டி'

என்று காலத்தை உருவகித்திருப்பது பாராட்டப்பட வேண்டியதாகும்.

'ஆண்டுகளுக்குக் கால்களே இல்லை
ஆகவே அவற்றுக்குச் சுவடுகள் இல்லை'

'காற்றில் கரைத்த கற்பூரத்தையும்
கடலில் கரைத்த பெருங்காயத்தையும்
மூக்கும் நாக்கும் முயன்றால் சுவைக்கலாம்
இறந்த காலத்தை எப்படிப் பெறுவது?

என்று கேட்கிறார் கவிஞர் 'இன்று வந்த இறந்த காலம்' கவிதையில்.

அவரே சாதுர்யமான விடையும் கண்டு சொல்கிறார், 'காலக் கணக்கன் காசுக்கடையில் என்னைக் கொடுத்துடன் எனக்குப் பதிலாய்ச் சில்லறையல்லவா மாற்றியிருக்கிறேன்' என்று. கவிதையைச் சுவைத்துப் புரிந்து ரசித்து மகிழ வேண்டிய விஷயம் அது.

தத்துவ சிந்தனைகள் ஒளிரும் கவிதைகளை மிகுதியாகப் படைத்துள்ள இளந்தேவன் 'தத்துவக் குறும்பு' பண்ணி மகிழ வைக்கும் முயற்சியிலும் அபூர்வமாக ஈடுபடுகிறார். 'காதலி ஒரு தத்துவ ஞானி' இத்தகைய ரசமான கவிதைகளில் ஒன்று.

நல்ல கவிதை வாசகரை சிந்திக்கத் தூண்ட வேண்டும். வண்ணப் படிமங்களை வாசகர் மனக்கண் முன் உருவாக்க வேண்டும். வாசகர் உள்ளத்தை மேலெடுத்துச் செல்ல வேண்டும். வாழ்க்கையின் செழுமையையும் அழகையும் வெளிப்படுத்தக் கூடியவையாக இருக்க வேண்டும். ஊக்கம்

அளிக்கக் கூடியதாகவும் அது அமைய வேண்டும். தனி மனித உணர்வுகளை மட்டுமல்லாது, சமுதாய அக்கறையைக் கொண்டதாகவும் விளங்க வேண்டும் அது மரபு வடிவத்தில் இருந்தாலும் சரி. கட்டற்ற போக்கிலே சுயேச்சை முறையில் அமைந்திருந்தாலும் சரி, உண்மை யான கவிதைத் தன்மை பெற்றதாக இருக்க வேண்டும்.

இந்த விதமான உயிரும் உணர்வும் உள்ள கவிதை களை—மரபு ஒளியும் புதுமை வேகமும் கொண்ட படைப்புகளை—சிந்தனை வீச்சும் ஒலி நயமும் பெற்ற இனிய சிருஷ்டிகளை கவிஞர் இளந்தேவன் ஆக்கி யிருக்கிறார்.

காற்றுக் குதிரையைக் கவிதைத் தேரில் பூட்டி, நேற்றும் நாளையும் அற்றதோர் வெளியிலே சஞ்சரித்து, அற்புதங்கள் செய்ய ஆசைப்படும் இளந்தேவனின் கவிதைச் சாதனைகள் படித்து உணர்ந்து ரசித்துப் பாராட்டப்பட வேண்டியவை ஆகும். அவர் மேலும் அரிய சாதனைகள் புரிய அவரது ஆற்றல் துணை நிற்கும் என நம்பலாம்.

சென்னை
19-10-91

**வல்லிக்கண்ணன்**

# பாரதியின் வீச்சு +
# பாவேந்தனின் அழகு +
# கண்ணதாசனின் ஆழம்
# = இளந்தேவனின் கவித்துவம்

---

கல்வியரசி டாக்டர் எலிசபெத் தாமஸ்

---

முறுவல் மர்மம் மோனாலிசா எனும் ஒய்யார ஓவியக்காரிக்கு மட்டும் சொந்தம் என இது வரை நினைத்திருந்தோம். உலக இலக்கியங்கள் அந்த ஓவியத்தைத்தான் காவியம் என்று சொல்லி வந்தன. ஆனால் இளந்தேவன் எனும் இந்த மண்ணின் மைந்தன் நம் ஏழைத் தமிழ் மகள் ஒருத்தியைத் தத்தெடுத்துத் தந்து உலக இலக்கியத்திலேயே உயரமான இடத்தில் அமர்த்தி விட்டார்.

**இவள் நின்றிருக்கும் ஓவியம்!**<br>
**நீல நிறக் கருங்குயில்!**<br>
**கல்விக் கூடம் செல்லக் கூட**<br>
**வக்கில்லாத வறுமைக்காரி!**<br>
**ஆத்தாளுக்குப் பிள்ளை தூக்கவும்**<br>
**அப்பனுக்குச் சோறு தூக்கவும்— அந்த**<br>
**ஏழைச் சுமைதாங்கி பிறப்பெடுத்திருக்கிறாள்**<br>
**புத்தகச் சுமை தூக்க, பொழுது அவளுக்கு இல்லை!**

இந்த எண்ண ஓட்டங்கள் மேலை நாட்டு மோனாலிசாவையே அழவைத்திருக்கும்.

நம் நாட்டின் அவலத்தை, அறியாமையை. பயத்தை, வறுமையை இதைவிட யாரும் சொல்லிவிட முடியாது.

பாவேந்தர் பாரதிதாசனின் சிறுமி தலைவாரிப் பூச்சூடி நின்றவள். அவளின் அன்னை அவளைப் பாடசாலைக்குச் செல்ல அனுமதித்தவள் தான். நடுத்தரம்! சற்றே தரம் அவளுக்கு இருந்தது.

நமது கவிஞரின் சிறுமி மேல் மட்டம் மட்டமாகிப் போனதால் கீழ் மட்டம் எனும் பிரிவில் பிடித்துத் தள்ளப்பட்டவள்.

''கோரை முடி வாரிவிடக்
கொஞ்சங்கூட எண்ணமில்லை''
(ஏன் எனில் எண்ணெய் இல்லை)

இவளின் முறுவல் மர்மம் பிரம்மாவுக்கே போடப் பட்ட ஒரு புதிர், மோனாலிசாவின் மர்மத்தை லியோனார் டாவின்சியாலேயே அவிழ்க்க முடியவில்லை. ஆனால் இந்தத் தமிழ்ப் பெண்ணின் மர்மத்தை நமது கவிஞர் இளந்தேவன் அவிழ்த்து விடுகிறார் பாருங்கள்.

''சட்டை கிழிஞ்சிருந்தா
சடுதியிலே தச்சிடலாம்
சமுதாயம் கிழிஞ்சிருக்கே
தைக்கக் கொஞ்சம் நாளாகும்''

இதே எண்ண ஓட்டத்தில் தான் இவரின் காற்றுக் குதிரை எல்லாக் கவிதை வானிலும் பறக்கின்றது.

இறைவன் வீட்டு முற்றத்தில் கூட சாதி பேதம் கண்டு சங்கடப்பட்டுக் கனைக்கிறது.

''ஏழை முன்னேற உழைப்பது தான் சமயம்.''

என ''ஞான ஞாயிறை''த் தொட்டு வருகிறது. அதிலே காற்றுக் குதிரையின் நிறம் கூட புடம்போட்ட பொன்னா கிறதே!

இராமர் கோயில்—பாபர் மசூதி காலக் கட்டத்தில் இளந்தேவனின் காற்றுக் குதிரை ''மசூதிப் புறாக்கள்'' பாடி மகிழும் பாங்கு நமக்கு எதிர்காலத்தின் மீது இருக்கும் ஏக்கத்தைப் போக்குகிறது. ''அத்தர் மணம் கமழும் அழகருக்கே வாழ்த்துரைக்கின்றது.''

காற்று வழிதனில் ஒரு காளான் முளைக்கிறது. தன்னம்பிக்கை தலை நிமிர்ந்து நிற்கிறது என்பதாக புதுக் கொள்கை விளைகிறது.

கர்நாடகத்தில் கைது செய்யப்பட்டு உள்ள காவேரியை நடக்க விட இவர் எடுத்த முயற்சி கண்டு தஞ்சையே கூடத் தழைத்தெழுந்து விடும் என்றே கூறுவேன். இந்தக் கவிதை கன்னடத்தில் மொழி பெயர்க்கப் பட்டு விட்டால் போதும் கடல் அளவு காவேரியை கர்நாடகமே உவந்து தரும் நமக்கு!

கவிஞரின் காற்றுக் குதிரை நெல்சன் மண்டேலாவை நிமிர்ந்து பார்க்கின்றது ''ஒரு மானிட வேள்வியின் ஆகுதி'' என்று சாசனம் செய்கின்றது.

''பற்றின்'' அடி ஆழத்தைக் காணக் காற்றுக் குதிரை பாய்வதும், ''விடிவை நோக்கி'' அதன் பிடரி மயிர்கள் சிலிர்த்துச் சீறிப் பாய்வதுவும், என நடையிலும் கருத்திலும் இளந்தேவன் இருக்கின்ற உயரம் கண்டு உலகக் கவிஞர்களில் உயர்ந்தவன் இந்த இளந்தேவன் எனப்பெருமை உண்டாகிறது.

**''உள்ளுக்குள் விடிந்தால்**
**உலகுக்கு விடியும்**
**இதுதான் விடிவு**
**என்பதென் முடிவு''**

என்ன வேகம் பாருங்கள்-கவிஞரின் எண்ண வேகம் பாருங்கள்!

**''உலகம் நமது**
**உறவினர்கள் அனைவரும்''**

என ''ஒரு சக்தி குமரனின் சங்கீதம்'' கேட்கிறது' அலாஸ்கா தொடங்கி ஆஸ்திரேலியா வரையில் அந்த கீதத்தை நம் காற்றுக் குதிரை கற்றுக் கொடுக்கிறது. வறுமைப் பனியில் வாடிய தோழர்க்கும் கைகளினாலே கத கதப்பூட்டுகிறது.

மனிதனுக்காக வசந்தத்தைத் தேடிக் குதிரை வான மெல்லாம் பறந்து பார்க்கிறது; முடிவில்

**''மனித வசந்தம் என்ப தென்றும்**
**மனதின் வசந்தம் மனிதா!''**

என வாய்மை காட்டுகிறது.

'பேன்'! இந்தச் சின்ன உயிருக்குக்கூட இந்தச் சிந்தனையாளன் தரும் இலக்கிய அந்தஸ்து பெரிது.

''ஓர் ஆட்சி மொழியின் ஆதிக்க வரலாறு'' சரியாகச் சமைக்கப்பட்ட ஓர் குறுங்காவியம். பறவைகளின் குரல் மூலம் இந்தப் பாரதத்தின் தலைவிதி பேசப்படுகிறது. பாவம் ஒன்று எப்படி நடந்ததென்பதை இளந்தேவன் காட்டும் கவிதைப் 'பா'வத்திலேயே காண முடிகிறது.

இன்று வந்த இறந்த காலம் என்ற கவிதை இளந்தேவன் ஒரு நல்ல கணக்கு வாத்தியார் என்பதன்

சாட்சி. எடுத்துச்சொன்னால் இதன் சுவைகெடும். எனவே நீங்களே படித்துப் பார்த்துப் பரவசம் கொள்ளுங்கள்.

கவிஞரின் காற்றுக் குதிரை "வியர்வையில் ஒரு விதி எழுது"கிறது. விண்ணிலும் மண்ணிலும் அதை எழுதுகிறது.

"உணவைத் தொடுகின்ற தனி உரிமை உழைக்கின்ற கைக்கே" என எழுதுகிறது.

**'மனிதர்கள் வியர்க்கும் பொழுதினிலே**
**மாபெரும் உலகம் உருவாகுமாம்! '**

எமர்சன் எனும் தத்துவ விற்பனர் "The God is the Noblest Creation of Mankind". என்று கவிதை சொன்னார். இங்கு அதையும் தாண்டி இளந்தேவனின் காற்றுக் குதிரை பறக்கிறது.

**"கல்லைப் படைத்தவன் கடவுளென்றால்**
**கடவுளைப் படைத்தவன் மனிதனடா!"**

ஆக, இளந்தேவன் காற்றுக் குதிரையைக் கொண்டு வந்து கவிதைத் தேரினில் பூட்டியதால் நேற்றும் இன்றும் நாளையும் அற்றதோர்—வெளி நெஞ்சை இழுக்கிறது; தமிழ் கொஞ்சிச் சிரிக்கிறது.

**பாரதியின் கவிதை வீச்சு!**
**பாரதிதாசனின் தமிழ் அழகு!**
**கண்ணதாசனின் தத்துவ ஆழம்!**

இவை இயல்பாகவே இந்த இளந்தேவனின் "காற்றுக் குதிரைக்குக்" கற்றுத் தரப்பட்டிருக்கின்றன! அதனால் ககனமே வனப்புப் பெறுகிறது. வாழ்க குதிரைக்குச் சொந்தக்காரக் குவலயக் கவிஞன்!

**டாக்டர் எலிசபெத் தாமஸ்**
**தாளாளர் & செயலாளர்**
**தாமஸ் கல்விக் கட்டளை**
**சென்னை-11**

# ஒரு கவிஞனின் கடிதம்

இனியவர்களே,

வணக்கம்,

என் நெஞ்சில் நிலைத்திருக்கும் உங்களுக்குப் பரிசாக, 'காற்றுக் குதிரை'யை அனுப்பியிருக்கிறேன். இவை அரபுக் குதிரைகளல்ல; மரபுக் குதிரைகள். கவித்துவத் தேருக்கு மரபுக் குதிரைகள் பூட்டுவது கம்பனும், பாரதியும், பாரதிதாசனும், வாணிதாசனும், தமிழ் ஒளியும், கண்ணதாசனும் செய்திருப்பது; பின்வந்தோர் புறக்கணித்திருப்பது. புதுமை செய்ய வேண்டும் என்னும் துடிப்பு புரிந்து கொள்ளக்கூடியதுதான். ஆனால் புதுக் கவிதை என்பது— வாயிலே பல் முளைப்பதற்காக வருத்தப்பட்டு, மூக்கிலே பல் வளர்க்க முற்படுவது— அதையே முற்போக்கு என வாதிப்பது; சாதிப்பது! ஏன் என்று கேட்டால், 'வழக்கமாக வாயில்தானே முளைக்கிறது அந்த மரபை உடைக்க வேண்டாவா?' என்று போதிப்பது!

புதுக் கவிதையாளரை 'நான் நேசிக்கிறேன் 'புதுக் கவிதையைக்கவிதை என்பதா' என்றுதான் யோசிக்கிறேன். நல்லவேளையாகப் புதுக்கவிதை எரி நட்சத்திரத்தைப் போல் ஆகிவிட்டது. படைத்தவர்களே அதன் உயிரைப் பறித்து விட்டார்கள்.

இப்போதைய என் வருத்தம் அதன் மீது அன்று. இந்த இடைக்காலக் குழப்பங்களால் எது கவிதை என்றே தமிழகத்துக்குத் தெரியாமல் போய் விட்டதே அது பற்றித் தான் கவலைப்படுகிறேன்.

முறையான சுவைத்திறனும், சரியான திறனாய்வும் இல்லாவிட்டால் எந்தக் கலைதான் வளரும்?

இன்றைய தமிழ்க் கவிதை உலகத்தில் குரல்கள் குறைவு; எதிரொலிகள் அதிகம். பாடுபொருளின் பரப்பு பெரிது படுத்தப்பட்டிருக்கிறது; கவித்துவம் கணுக்கால் அளவே காட்சியளிக்கிறது. விளைவு?— சுவைஞர்கள் மூழ்கிக் குளிக்கவும் முற்றும் களிக்கவும் முடிவதில்லை.

தமிழ்க் கவிதைக்குச் சிறந்த திறனாய்வுகள் வந்ததுமில்லை; வருவதுமில்லை. ஆகவே பொத்தாம் பொதுவாகப் புத்தகங்களைப் போற்றுகிற போக்கு எங்கும் காணப்படுகிறது. மல்லிகைப் பூக்களை எருக்கிலைகளோடு இணைத்துக் கட்டுகிற மலின ரசனை தமிழனிடம் மாறவில்லை. நான் 'வெளிச்ச விரல்கள்' தொகுப்பிலேயே சொல்லியிருக்கிறேன்.

'சீசருக்குக் கொடுக்க வேண்டியதைச் சீசருக்கும்
தேவனுக்குக் கொடுக்க வேண்டியதைத் தேவனுக்கும்
கொடுங்கள்' என்று.

'தேவனு'க்குக் கொடுக்க வேண்டியதைத் 'தேவனு'க்குக் கொடுத்து விட்டீர்களா?

கம்பனுக்குப் பிறகு கவிதையே வரவில்லை என்று கதைப்பதும், பாரதிக்குப் பிறகு பாவலனே தோன்றவில்லை என்று பாசாங்கு செய்வதும் பம்மாத்து வேலைகள்.

இறந்த காலத்திலே இதயத்தை வைத்து விடுவது சவங்களோடு சல்லாபம் செய்வது.

தமிழா! நிகழ்காலத்தைப் போற்று! உனக்கு எதிர்காலம் தோன்றும்!

விருட்சங்களில் இருக்கிற விதைகளையே பார்க்க முடியாத உனக்கு, விதைகளுக்குள் இருக்கிற விருட்சங்கள் எப்படித் தெரியப் போகின்றன!

மேல் நாட்டாரும், ஏன் வடபுலத்தாரும் நிகழ்காலக் கவிஞரைப் போற்றுகிற அளவுக்கு நீ எப்போது போற்றப் போகிறாய்?

உன் காலத்து மகாகவிகளை அடையாளம் கண்டு கொள்!

இந்தத் தொகுப்பு உனக்கு உதவும்.

2-11-1991
D/ 44, தாடண்டர் நகர்
சென்னை-15.

இன்ப அன்புடன்
**இளந்தேவன்**

# காற்றுக் குதிரையைக் கொண்டுவா!

காற்றுக் குதிரையைக் கொண்டுவா—என்
கவிதைத் தேரினில் பூட்டுவாய்—அட
நேற்றும் நாளையும் அற்றதோர்—வெளி
நெஞ்சை இழுக்குது பாரடா!

மிதிலையி லேஒரு ஜானகி—இடை
மெலிவினைக் காட்டும் மின்னலை—அட
உதிருமுன் சண்பகப் பூக்களை—என்
ஊர்வலப் பாதையில் வரவிடு;

பச்சைக் கமுகுகள் உயர்வதைத்—தினம்
பார்த்து வியந்திடும் புற்களின்—தலை
உச்சியி லேபனி முத்துகள்—அவை
உதிருமுன் ஊர்வலம் போகலாம்!

கரும்புப் பூக்களின் நுரைகளும்—வான்
கழநியில் மேய்முகில் நிரைகளும்—மனம்
விரும்பிச் சாப்பிடும் உணவடா—அட
விரைவினில் குதிரையைக் கொண்டுவா!

நீலக் கடலலை முழுவதும்—வான்
நெய்யும் சிறுமழை விழுவதும்—அதில்
கோலப் படகுகள் உழுவதும்—ஒரு
கோடிப் பொன்பெறும் அழகடா!

காலக் கிழவியின் கடையிலே—ஒரு
காசுக் காயிரம் தாரகை—நாம்
மாலைப் பொழுதினில் வாங்கலாம்—நில
மங்கைக் கணிகலம் ஆக்கலாம்!

காற்றுக் குதிரையைக் கொண்டுவா—என்
கவிதைத் தேரினில் பூட்டுவாய்—அட
நேற்றும் நாளையும் அற்றதோர்—வெளி
நெஞ்சை இழுக்குது பாரடா!

—பாரதி கலைக் கழகம் கவிமலர், 1990



# நடப்பாய் வாழி காவேரி !

தஞ்சையெலாம் புஞ்சை!
தமிழ்நாடு பாலைவனம்!
பஞ்சையர்கள் நாங்கள்! இந்தப்
பழியுனக்கோ காவேரி!

பச்சைப் பயிர்கருக
படீரென்று தரைபிளக்க
உச்சிக் கதிர், உயிரை
உறிஞ்சுதடி காவேரி!

குடகுமலைக் கைகாரி,
கோபமென்ன? அருளையெல்லாம்
அடகுவைத்து விட்டாயோ,
ஆருயிரே காவேரி!

இமயமலை 'என் தண்ணீர்
எனக்குத்தான்' எனச் சொன்னால்
சமவெளிகள் நிலைஎன்ன,
சகாராவா காவேரி!

தாய் வீட்டுக்கே பெண்கள்
தனியுடைமை எனச்சொன்னால்
சேயுண்டோ? ஆண்களென்ன
செய்வார்கள் காவேரி!

ஒரு நாளுக் கொருமுறைதான்
உடலில்ரத்த ஓட்டமென்று
வரம்பு வைத்தல் படுகொலைக்கு
வழியன்றோ காவேரி!

காழ்ப்பால் உலகத்தார்
கருணைஇழப் பாரெனினும்
தாய்ப்பாலுக்கு அணைபோட்டுத்
தடுப்பாரோ காவேரி!

'தேசியமும் பொய்யோ!
திராவிடமும் பொய்தானோ!
பாசமிலாக் கலிகாலம்
பார்த்தாயா காவேரி!

காகம் கவிழ்க்க வந்த
கமண்டலத்து மாநதியே
தேகம் எரியுதடி
திரும்ப வா காவேரி!

'டிரிபியூனல் காகம்' திரும்பக்
கவிழ்த்த பின்தான்
வருவாய்நீ போலும்
வசங்கெட்ட காவேரி!

அப்பன் சிறைவைப்பான்
ஆனாலும் கன்னியர்கள்
தப்பிவரல் தர்மந்தான்
தயங்காதே காவேரி!

அணைக்கட்டுச் சிறைதாண்டு!
அதிகார விலங்கையொடி!
அணைக்கட்டும் தமிழ்நாடு!
ஆடிவா காவேரி!

கல்கி தீபாவளி மலர் 1990



# வாழ்க்கையென்னும் கோலம்

வாழ்க்கை என்னும் கோலம்—இதை
வரைபவர்யார் நாளும்?

புள்ளி வடிவில் விதியை வைத்த:
இறைவன் ஒருபுறம்!-'கோலம்
போடுபவன் நானே' என்னும்
மனிதன் மறுபுறம்!

வாழ்க்கை என்னும் கோலம்—இதை
வரைபவர்யார் நாளும்?

என்ன வடிவம் எண்ணிப் புள்ளி
இறைவன் வைத்தானோ—அதில்
எதையிழுக்க வேண்டும் என்று
இவனிழுத்தானோ,

'இட்ட புள்ளி தவறு' என்று
    மனிதன் சொல்கிறான் — 'இல்லை
இழுத்த கோடு தவறு' என்று
    இறைவன் சொல்கிறான்!

வாழ்க்கை என்னும் கோலம்—இதை
வரைபவர் யார் நாளும்?

வாதி மனிதன் பிரதி வாதி
    இறைவன் ஆனதால்—உலக
வாழ்க்கை என்னும் கோலம் அலங்
    கோலம் ஆனது!

வாழ்க்கை என்னும் கோலம்—இதை
வரைபவர்யார் நாளும்?



# ராஜீவ் உனக்காக ஒரு பாடல்!

தேர்தல் பாதியில் நிற்கிறது!
தேசம் வீதியில் நிற்கிறது!
ஏதோ மனதைப் பிசைகிறது!
எதிரே இருளே தெரிகிறது!

தென்றல் அழுகிறதே!—குயில்
தீயில் விழுகிறதே!
கன்றும் கதறியதே—ஐயோ
கண்கள் சிதறியதே!

தேசம் அலறியதே—ஐயோ
தெய்வம் பதறியதே
நாசம் தெரிகிறதே—எங்கோ
நரகம் நகைக்கிறதே.

மரணம் தலைகுனியும்—அதன்
மனதிலும் நாணம் வரும்
தருணம் பிறந்ததுவே—எங்கள்
தலைகள் குனிந்தனவே

விரியன் பாம்புகளின்—விஷ
விருப்பம் நடக்கிறதே
சரியா தமிழகமே—உன்
சாதனை பெரியதுதான்!

சாப்பிட வந்தவனே—எங்கும்
சாப்பிடப் படுவதுண்டோ!
மாப்புகழ் தமிழகமே—இந்த
மகிமை உனக்குண்டோ!

தாயே தமிழ்மகளே—என்
தலைவனைப் பார்த்தாயா
நீயே சொல்தாயே!—இங்கு
நிகழ்ந்தது சரிதானா!

கன்னச் செழுமையிலே—புதுக்
காஷ்மீர் ஆப்பிள் தரும்
சின்னக் கவிதையடி—இங்கு
சிதைந்து முடிந்ததடி!

முத்தக் குளிப்பாட்டி—உச்சி
முகர்வாய் என வந்தான்
ரத்தக் களமானான்—என்
ராஜீவ் பிணமானான்.

கங்கை வழிந்தாலும்—தாயே
களங்கம் அழியாதே!
பொங்கும் கண்ணீரால்—தாயே
புனிதம் திரும்பாதே!

ஆருக் கழுவேன் நான்—ராஜீவ்
அவனுக் கழுவேனா?
தீராப் பழி கொண்டாள்--என்
தீந்தமிழ்க் கழுவேனா!

திருப் பெரும் பூதூரரே—உன்
திருப்புகழ் கேட்டாயா!
கறைப்படு கின்றாயே!--என்
கவலையை யார்க்குரைப்பேன்!

ஊர்க்கொரு புறத்தினிலே—ஐயோ
உயரிய மேடை என்றார்
பார்க்கொரு தலைவனவன்—அங்கே
பார்த்திடுவான் என்றார்!

மேடை யிருக்கிறது—ஐயோ
மெருகு குலையாமல்
பாடையி லேஏறி—அவனோ
பயணம் தொடங்கிவிட்டான்!

தேர்வரும் என்றிருந்தோம்—அவன்
திருமுகம் காண்பதற்கே
நாராய்க் கிழிந்தபடி,—இந்த
நாட்டினைத் தொழுதபடி,

ஐயோ விழுந்து விட்டான்!—இனி
யார் முகம் பார்த்திருப்போம்?
பொய்யாய்ப் போகாதோ—அந்தப்
பொன் மகன் வாரானோ!

கண்ணீர்ச் சுரப்பிகளே!—நீங்கள்
காய்ந்து புகைந்தீரோ!
செந்நீர் வரலாச்சே—வங்கம்
சிவப்புக் குளமாச்சே!

இந்திரத் தாய் இறந்தாள்—இவன்
இருப்பதனால் இருந்தோம்!
மந்திரத் தமிழ் பாடி—அவன்
மலர்முகம் நோக்கிநின்றோம்!

செந்தமிழ்த் தாய்மடியில்—அன்பில்
திளைத்திட வந்த மகன்
வெந்து தணிந்தானே!—எமை
விட்டுப் பிரிந்தானே!

ஆயிரம் ராஜீவ்கள்—நல்ல
அழகிய தாமரைகள்
நீதர வேண்டுமடி—தமிழே
நின் பழி நீங்குமடி!

அந்நாள் வரையினிலும்—நாங்கள்
அரைகுறை மனிதரடி
கண்ணார் தமிழ் மகளே — இந்தக்
கடமையைத் தொடங்கிவிடு,

ராஜீவ் படுகொலை செய்யப்பட்ட இடத்தில் 18-ஆம் நாள் விளக்கு வழிபாட்டின்போது பாடப்பட்டது.



# காதலி ஒரு தத்துவஞானி

காதல் என்பதோர்
தத்துவ ஞானம்
காதலி என்பவள்
தத்துவ ஞானி!

அவளும் நானும்
பேசிக்கொண் டிருந்தோம்
அப்போது தானிந்த
உண்மையை உணர்ந்தோம்!

அவள் : அத்தான் எனக்கோர் ஐயம்

நான் : கேளேன்;

அவள் : நெல்லைப் புதைத்தால் நெல்விளை கிறது!
எள்ளைப் புதைத்தால் எள்விளை கிறது;
மனிதனைப் புதைத்தால் எதுவிளை கிறது?

நான் : அடடே, அற்புதம்!
தொடர்ந்துசொல் கண்ணே!

அவள் : மயானம் என்கிற எலும்புத் தோட்டத்தில்
மனிதனைப் புதைக்கிறோம்!
மறுநாள் சென்று
மறந்து விடாமல் பால்தெளிக் கின்றோம்!
ஆயினும் அவனேன் முளைப்பதே இல்லை?

நான் : காதலி உன்றன்
பார்வையில் எந்தப் பழுதுமே இல்லை!
உய்த்துணர் வதில்தான் ஒருபிழை உள்ளது!

அவள் : உணர்த்துங்கள் தெளிகின்றேன்.

நான் : தன்னிலிருந்து தன்னைப் படைக்க
விதைஎப் போதும் மண்ணுக்குள் புதைகிறது
மனிதன் எப்போதும்
பெண்ணுக்குள் புதைகிறான்!

அவள் : போதுமே உங்கள் தத்துவக் குறும்பு!

நான் : புதைகிறேன் எங்கே இப்படித் திரும்பு!

—நங்கூரம்



# இறைவன் வீட்டு முற்றத்தில்

இறைவன் வீட்டு முற்றத்திலேன்
இத்தனை பேதம்—இன்னும்
எத்தனை நாள் உயர்வு தாழ்வு
என்கிற வாதம்?

மனிதர் நோக மனிதர் செய்யும்
கொடுமைகள் போதும்—இந்த
மண்ணிலேதீண் டாமையெண்ணம்
மாபெரும் பாவம்!

தொடுவதற்கு நிலவு வரை
கையை நீட்டுவான்—தன்
தோளருகே நிற்பவனைத்
தொடவும் கூசுவான்!

கொடுமையிந்தக் கொடுமைபோல
உலகில் இல்லையே—இந்தக்
கோணல் புத்தி மனிதருக்கோர்
இதயம் இல்லையே!

வானைத் தொட்ட தென்றல்
மண்ணைத் தொடுவதில்லையா? — அது
வழியில் கண்ட மலரை
முத்தம் இடுவதில்லையா?

மானுடத்தில் மட்டுமிந்தப்
பண்பு இல்லையா?—அட
மனிதன் என்ன இயற்கை பெற்ற
பிள்ளை இல்லையா?

பொழுது போக்க மீன் பிடித்தால்
உயர்ந்த சாதியா?—சிலர்
பொருளைத் தேட மீன் பிடித்தால்
தாழ்ந்த சாதியா?

பழுதுபட்ட இந்த எண்ணம்
மனித நீதியா?—இந்தப்
பாவம் போக்க நூறு காந்தி
இன்னும் தேவையா?

நூறுசாதி நூறுநீதி
யார் வகுத்தது?—மன
நோயில் வந்த பாவம்
இங்கு யார் வளர்ப்பது?

வீறு கொண்ட பாரதத்தின்
சீர் கெடுப்பது—சாதி
விதையில் தீயை வைக்க
என்று நாள் குறிப்பது?

விலக்கி வைத்த நீர்த்துளிகள்
நீருடன் சேரும்!—பெரும்
வேட்கையோடு கைகள் கோத்து
நதியென மாறும்!

உழக்குக்குள்ளே திசைகள் தேடி
அலைந்தது போதும்—இந்த
உண்மை வேதம் ஓதி நீரும்
உருப்பட வாரும்!

விழுது விட்ட ஆலைப் போல
நிமிர்ந்து நில்லுங்கள்—கை
விழுதுகளால் மண்ணை மீண்டும்
தழுவிக் கொள்ளுங்கள்!

அழுது நிற்கும் தோழர் தோளில்
கைகள் போடுங்கள்! நாம்
அனைவரும் ஓர் தாயின் மக்கள்
என்று பாடுங்கள்!

— அமுதசுரபி



# அம்பேத்கர் அந்தாதி

தேன்மொழியே கேளிதுதான்
தீராதி தீரனெங்கள்
ஆண்டகையாம் அம்பேத்கர் நூற்றாண்டு
—கூண்டுவிட்டுச்

சிங்கம் எழுந்துவந்த
சீர்த்திமிகும் நூற்றாண்டில்
எங்கும் அவர்புகழைக்
கேள்!

கேளம்மா அம்பேத்கர்
கீர்த்திதனை, நானூறு
நாளம்மா போதாது நானுரைக்க
—வாளம்மா

நுண்ணறிவு அந்த
நுழைபுலத்து நாயகர்க்குக்
கண்ணிரண்டும் காந்தக்
கடல்!

காந்தக் கடல்தான்!
கண்ணெதிரே காணுகின்ற
மாந்தக் கடலிழுக்கும் மந்திரம்தான்
—சாந்தமகான்

நெற்றிப் பரப்பும்
நிறைகருணைத் திருவிழியும்
இற்றைக்கும் வாழும்
எழில்

எழிலுக்கும் எங்களுயிர்
இந்தியத்தாய் வாழ்க்கைப்
பொழிலுக்கும் நீரான புண்ணியன்காண்!
—தொழிலுக்குச்

சட்டம் படித்தமகன்
தாழ்வுற்ற மக்களுக்கு
முற்றும் அவனே
முதல்!

முதல்நாள் அறைப்புகுந்து
மூன்றாம்நாள் வந்த
உதயம் வரைக்கும் உறங்கா(து)
—இதயமெலாம்

கல்விக்கே அர்ப்பணித்த
கண்ணே! கலைமகளாம்
செல்விக்கு நீயன்றோ
சேய்!

சேய்வேண்டும் எம்மினத்தின்
சீருக்குக் குரல் கொடுக்க
வாய்வேண்டும் என்பார்க்கு வாய்த்தவனே!
—கோவேந்தர்

காலமுதல் ஆட்டமிட்ட
காட்டேரி யாம் சாதி
தோலுரியக் கண்டதுன்
தொண்டு!

தொண்டுக்கோர் சாதி
துரைத்தனத்துக் கோர்சாதி
பண்டை வழக்கமென்ற பல்லவிகள்
—தொண்டையிலே

வீக்கும் படிநீ
விழித்தவுடன் சாதிஉயிர்
கக்கும் படியாச்சு
காண்!

காணும் திசையெல்லாம்
கற்பி! உடன் ஒன்றுபடு
பூணும் உரிமைப் புரட்சிசெய்
—மானுடத்தின்

அங்கம்நீ! மண்ணல்ல!
ஆமையல்ல! என்றுரைத்த
தங்கம்நீ என்றன்
தமிழ்!

தமிழுக்குச் சாவில்லை!
தண்டமிழே சாவுச்
சிமிழுக்குள் நீயடங்க மாட்டாய்
—உமிழுமுன்றன்

வாய்நீர் அமிலமையா
வாய் திறந்து நீபருகும்
தேநீரும் சூரியனின்
சாறு!

சாறு பிழிந்தெடுத்த
சக்கையென வந்தவர்க்கு
வீறு தரவந்த வித்தகனே!
—ஏறுநிகர்

அம்பேத்கர் என்னும்
அறிவுலகப் பெம்மானே
தெம்பூட்டும் உன்வாய்ச்சொல்
தேன்!

தமிழரசு 16-5-90



# ஓர் ஆட்சிமொழியின் ஆதிக்க வரலாறு

அந்தக் காட்டில்
அந்த மரம்தான்
ஆண்டில் மூத்தது!
புயல், மழை, வெள்ளம்
பூகம் பங்கள்

அனைத்தையும் தாண்டி
அதுநிற் கிறது!
ஆயிரம் பறவைக்கு
அதுதான் தாயகம்

ஒருநாள் மாலை
ஒரேஎ குழப்பம்!
பறவை களுக்குள்
ஆட்சி மொழிஎது

என்ற வாதத்தில்
எல்லாம் இறங்கின!
சிட்டுக் குருவியின்
வார்த்தைகள் எல்லாம்

தந்தி பாஷையில்
அமைந்திருப் பதனால்
தகுதியே இல்லை
என்றொரு வாதம்!

நாரை மொழிக்கு
நளினமே இல்லை!
கொக்கு மொழியோ
பக்குவம் பெறாதது!

—இப்படி மறுப்புகள்
இயம்பப் பட்டன!
'கிளிமொழி வேண்டும்'
எனுங்குரல் எழுந்ததும்

வழிமொழி யச்சில
வாய்கள் திறந்தன!
'மனிதர்கள் மொழியையும்
இனிபேசுவதால்

தேவ பாஷை' என்று
தெரிவிக்கப் பட்டதா,
'இளியார் பேசும்
மொழியார் அறிவார்

வேண்டாம்' எனஉடன்
விலக்கப் பட்டது!
'மைனா எப்படி?'
என்ற உடனே

'மைனா ரிட்டிகள்
மொழி கூடாது'
என்னும் கூச்சல்
எழும்பத் தொடங்கிற்று!

‘கோட்டான் மொழிக்கென்ன
குறைச்சல்?’ என்றங்கு
ஆந்தை கேட்டதா,
அடுத்த நொடியே

‘இரவு மொழிகள்
பகலுக் காகா’
என்ற மறுப்புடன்
எழுப்பப் பட்டது...

இப்படி யாக
வாதங்களை எல்லாம்
வரிசையாய் மறுத்தவை
எவையெனில், அவையே

வடக்குக் கிளையில்
வாழ்கிற காக்கைகள்!
தெற்கே செல்லும்
ஒருபழங் கிளையில்,

குயில்கள் இந்தக்
குழப்பத்தில் சேராமல்
கூவிக் கூவி
மகிழ்ந்துகொண் டிருந்தன!

காக்கைகள் குயில்களைப்
பார்த்துக் கேட்டன:
'கடைசியாய்க் கேட்கிறோம்
உம்முடி வென்ன?'

'வெளி உல கத்தின்
தூதுவ ராக
விளங்கிக்கொண் டிருப்பது
வெள்ளைப் புறாதான்!

பண்படா மொழிகள்
பக்குவம் பெறும்வரை
வெண்புறா மொழியை
ஆட்சியில் அமர்த்தலாம்'

குயில்கள் இவ்வாறு
கூவத் தொடங்கியதும்
காக்கைகள் கூடிக்
கதறத் தொடங்கின:

'ஆண்டாண்டு மரத்தை
ஆள்கிற நமக்கிங்கு
அண்மையில் வந்த
வெண்புறா மொழிஏன்?

வெள்ளையனுக்கு
வெண்சா மரம்வீசும்
குயில்கள் ஒழிக!'
என்று கதறின.

எண்ணிக்கையில் என்றும்
விஞ்சி யிருக்கும்
எங்கள் மொழியே
ஆளும் என்றன.

காக்கையின் அலறல்
காதைத் துளைத்ததால்
பறவைகள் வெறுப்பால்
பேசா திருந்தன.

இந்த மௌனமே
சம்மதம் என்றுடன்
அந்தக் காக்கைகள்
அறிக்கை விட்டன!

அடுத்த நொடியே
காக்கைகள் பேசும்
கச்சா மொழியே
ஆட்சி மொழியாக
அறிவிக்கப்பட்டது.

தாய் 25-1-1987

# நீதித் தாயின் நெற்றிக்கண்
# நெல்சன் மண்டேலா

காலைக் குயிலின் பாடற் பொருளே
நெல்சன் மண்டேலா—என்
காலப் புரட்சியின் மூலப் படையே
நெல்சன் மண்டேலா

நீலக்கடலின் ஓலத்திரையே
நெல்சன் மண்டேலா—நம்
நீதித்தாயின் நெற்றிக் கண்ணே
நெல்சன் மண்டேலா

தென்றல் காற்றுக் குள்ளே இருக்கும்
தீயே மண்டேலா—ஒரு
தீர்ப்புக்காகக் காத்துக்கிடக்கும்
அறமே மண்டேலா

கன்றுக் காகப் பாலைச் சொரியும்
தாயே மண்டேலா—ஒரு
கருப்புக் குரலுக்குக் காகக் கிடைத்த
வாயே மண்டேலா!

இருட்டுச் சிறையைத் தாயின் கருப்பை
என்றே கொண்டானோ—அதில்
இரண்டாம் தடவை கருவாய்க் கிடந்து
வெளியே வந்தானோ.

மருட்டித் திரியும் ஆதிக் கப்பேய்
மரணம் குறித்தானோ—ஒரு
மானுட வேள்வியின் ஆகுதி என்றே
தன்னை நினைத்தானோ!

கருப்பு நெருப்பில் வெள்ளை இருட்டு
கருகிச் சாகிறது—அட
காட்டுத் தீயில் பார்த்தினி யச்செடி
சாம்பல் ஆகிறது!

நெருப்புழு திக்குள் கருப்புத் தோழன்
கிடந்தது சிலகாலம்—அவன்
திருவோ லக்கச் சிறப்பைப் பார்க்கத்
துடிக்குது எதிர்காலம்!

தமிழரசு



# ஒரு சக்தி குமரனின் சங்கீதம்

தோழனே! நிமிர்ந்து நில் தோற்காது மானுடம்!
கைகளின் ஆற்றலைக் கணக்கெடு! அதற்கு முன்
நெருப்பைப் பிழிந்து சாறெடு! அந்த
அக்கினிச் சாற்றை அடிக்கடி பருகு!

இப்படிச் செய்வதால்,
இதயம் எப்போதும் துருப்பிடிக்காது!
பாதாளத்தின் கருப்பை வரைசெல்
காற்றெனும்
வேதா ளத்தின் முதுகிலே ஏறு!

பூமி எங்கும் செலமுடி யாதபடி
வளைத்துப் பிடித்து வைத்திருக் கின்ற
வானத்தைக் கிழி! பேரண்டத்தை ஆளும்

மோனத்தைப் பேசவை! முதலில் சிலர்மன
ஊனத்தைப் போக்க உதவி செய்! சொன்னேன்—
நிலம், நீர், வான், வளி, நெருப்பெனப் படுகிற

ஐம்பூ தங்களை வேட்டைநா யாக்கு
அவற்றின் கழுத்திலே சங்கிலி போட்டுவை!
சாவு நமக்குச் சர்க்கரைப் பொங்கல்!
சாப்பிட்டு விட்டுத்தான் சங்கீதம் பாடுவோம்!

உலகம் நமது! உறவினர் அனைவரும்!
எட்டுத் திசையும் கைகளை நீட்டு!
அலாஸ்கா தொடங்கி ஆஸ்திரேலி யாவரை
அனைத்து மக்களையும் அவைதழு வட்டும்!

வறுமைப் பனியில் வாடிய தோழர்க்குன்
கைகளினாலே கதகதப் பூட்டு!
உன்னை நம்பு! உறுதி உரைக்கும்
என்னை நம்பு! எல்லாம் வெற்றியே!

தாய் 15-1-1984



# இன்று வந்த இறந்த காலம்

அகவை எனக்கு ஐம்ப தானது
ஐம்பத் தொன்றின் அணைப்பில் இருக்கிறேன்

சூனியம் என்னும் குழிக்குள் இதுவரை
ஐம்பது கோலிகள் உருட்டி யிருக்கிறேன்
ஐம்பது ஆண்டுகள் ஐம்பது வசந்தம்
எப்படி ஓடின? எதற்குள் ஓடின?

ஆண்டு களுக்குக் கால்களே இல்லை
ஆகவே அவற்றுக்குச் சுவடுகள் இல்லை!

காற்றில் கரைத்த கற்பூரத் தையும்
கடலில் கரைத்த பெருங்கா யத்தையும்
மூக்கும் நாக்கும் முயன்றால் சுவைக்கலாம்
இறந்த காலத்தை எப்படிப் பெறுவது?

......... ......... ......... .........
......... ......... ......

"வெட்ட வெளியிலே திரைப்படம் பார்க்கும்
வித்தையை எங்கட்கும் சொல்லுங்கள் அப்பா!"

வாயிற் படியில் கேட்ட குரல்கள்
'வா' இப் படியென என்னை அழைத்ததால்
மண்ணிலே மறுபடி கால்களைப் பதித்தேன்

இதோஓ என்மகன்

வேகத்தைப் புயலுக்குக் கற்றுக் கொடுக்கும்
வேங்கை, இவனுக்கு முப்பது வயது!

இதோஓ என்மகள்!
பூத்துக் குலுங்கும் புதுமலர்ச் சோலை
இந்தச் சோலைக்கு இருபது வயது!

இதோஓ முப்பது! இதோஓ இருபது!
ஆக மொத்தம் ஐம்ப தாயிற்று!
இறந்த காலம் இதோநிகழ் காலமாய்
எனக்குமுன் னாலேயே சிரிப்பதைப் பார்க்கிறேன்

என்னைநான் எங்கே இழந்துபோ யிருக்கிறேன்?
காலக் கணக்கன் காசுக் கடையில்
என்னைக் கொடுத்துடன் எனக்குப் பதிலாய்ச்
சில்லறை யல்லவா மாற்றி யிருக்கிறேன்!

கல்கி தீபாவளிமலர்



# பேன்

பெருத்த மனிதமலை!
பேருச்சி! உச்சியிலே
கருத்த மயிர்க்காட்டில்
காட்டெருமை மேய்கிறது!

காட்டெருமைக் கன்றுகளைக்
கைநகமாம் குன்றுகளால்
வீட்டரசி நசுக்குவது
விளையாட்டா! படுகொலையா?

சிற்றிடையார் காதுவரை
சுற்றிவரும் சிற்றெருமைக்
குட்டிகளில் ஒன்றென்றன்
நெற்றியிலே ஓடியது!

பார்த்தார் பரிகசித்தார்
பாவைக்கும் எனக்குமுள்ள
நேற்றை உறவை அது
நிதர்சனமாய்க் காட்டியதால்!

# கச்சிதமா? கச்சு இதமா?

மனத்துறவு வேண்டும் என்றாள்;
மனத்து+உறவு வேண்டும் என்றேன்!

விழிப்புணர்ச்சி வேண்டும் என்றாள்;
விழிப்+புணர்ச்சி வேண்டும் என்றேன்!

கச்சிதமாய் இருவருக்கும்
இருக்கிறது கருத்தென்றாள்
கச்சு+இதமாய் இருக்கிறதா
காண்போமா எனச்சொன்னேன்!

அப்போது மட்டும் ஏன்
அவளுக்குக் கோபம்? நான்
தப்பேதும் செய்தேனா
தயைகூர்ந்து சொல்லுங்கள்.

குமுதம்—5-5-1988



# காலக்கிழவி ஒரு கைத்தறி நெசவுக்காரி

இந்த ஆடை யாருக் காகப் பாட்டி?—இதில்
எனக்கு வேணும் நூறு முழம் வேட்டி!

கருப்பு நூலை நீள வாக்கில் நீட்டி—ஒளிக்
கற்றை நூலைக் குறுக்கு வாக்கில் ஒட்டி,

இரவும் பகலும் பாவும் ஊடும் ஆக்கி—நாள்
என்னும் ஆடை நெய்யும் கூனிப் பாட்டி!

இந்த ஆடை யாருக் காகப் பாட்டி?—இதில்
எனக்கு வேணும் நூறு முழம் வேட்டி!

அமுதசுரபி—சூலை 1985



# சாவுக்குச் சிலை வைப்போம்

இவர்கள்......
வயிற்றுக்கு உபயோகம் வரவில்லை என்பதனால்
கயிற்றுக்கு உபயோகம் கண்டுவிட்ட பஞ்சையர்கள்!

மயான புரியில் மரணத்தைச் சந்திக்கச்
சுவரேறிக் குதித்தவர்கள்; சுடுகாட்டின் குடிமக்கள்!

கண்களின் ஊற்றுகள் காய்ந்துவிட்ட காரணத்தால்
நாக்கின் நுனிகளிலே ரத்தத்தைச் சிந்துபவர்!

சாவூரின் எல்லைவரை இவர்களைத் துரத்திய

வறுமை அல்சேஷன் யார்வீட்டில் வளர்கிறது?

வெந்த வயிற்றின் வெளியீடு களாகிய
இந்த நாக்குகள் எதைச் சொல் கின்றன?

பாரத மாதாவின் பட்டினிக் குழந்தைகள்
பிதுங்கிய விழிகளால் எதைப் பார்க்கின்றன?

பட்டினியின் விஷப்பற்கள் பட்டுவிட்ட ஊர்களிலே
அடுத்த கயிறு யார்க்கென்று பார்க்கின்றார்!

வறுமையின் வாய்நெருப்பில் வறுத்தெடுக்கப்
பட்டவர்க்கு,
சுதந்தரத்தை மரணம்தான் வழங்குமெனச்
சொல்கின்றார்!

ஆகையினால் சொல்கின்றேன்......

காயத்திரி மந்திரமும் காட்டாத அமைதியினைக்
கயிற்றுச் சுருக்கு கட்டாயம் தருமென்றால்,
தமிழ்நாட்டில் நிற்கின்ற தலைவர்களின் சிலை நடுவே
சாவுக்கும் ஒரு சிலையைச் சமுதாயம் வைக்கட்டும்!

(சிவப்பு மலர்கள் — ஜன—பிப்-1981)
(வறுமையால் கயிற்றில் தொங்கிய பிராமணர்
இருவரைப் பற்றிய கவிதை)



# ஒரு காளான் குருவாகிறது

சாமிக்குப் பக்தன்
குடைபிடிப் பதுபோல்
பூமிக்கு வானம்
குடைபிடிக் கிறது!

பூமிக்கு நீலக்
குடைபிடிக்கின்ற
வானத்தைப் பார்த்து,
தானும் பூமிக்குக்
குடைபிடிக் கிறதே
சின்ன காளான்,
அது—

வெள்ளைக் குடையை
விரிக்கின்ற அழகை
உள்ளம் இருந்தால்
ஒரு முறை பார்த்து வா!

எத்தனை பெரிய
இலட்சியம் அதற்கு

ஆல மரங்கள்
இருக்கிற போது
அடியேன் எதற்கு

என்று நினைக்கும்
தாழ்வு நெஞ்சம்
அதற்கிருந் திருந்தால்
தலை நிமிர்ந் திருக்குமா
சின்ன காளான்!

நிழலைத் தேடி
ஒதுங்க நினைக்கும்
நினைப்பு களுக்குக்
கருத்தடை செய் நீ!

நீள்புவி இதற்கே
நிழல் தருவேன் நான்
என்ற நினைப்பிலே
வேர்களை ஊன்று!

இந்த முயற்சியில்
ஒரு வேளை நீ
படுத்தால் கூட
இமயமாய்ப் படுப்பாய்!

உன்—
சிகரங்களைக் கண்ட
சிலிர்ப்பிலே புதிய
உயரங்களை இந்த
மானுடம் பார்க்கும்

அமுதசுரபி தீபாவளி மலர்—1990



# யுகக் கவிஞன் பாவேந்தன்

காற்றுக்குக் கவிபாட
ஆசை வந்தால்
கனகசுப்பு ரத்தினத்தின்
வாசல் வந்தே

ஏற்றுக்கொள் மாணவனாய்
என்று கெஞ்சும்!
இளந்தென்றல் தனைப்பரிசாய்க்
கொடுக்கும்! பொங்கும்

ஊற்றுக்குத் தமிழ்பேச
ஆசை வந்தால்
உச்சரிக்கும் பாவேந்தன்
பேரை! திராட்சைச்

சாற்றுக்குள் சுவையோடும்
இவன்தே கத்தில்
சந்தமும் தமிழோடும்
குருதி யாக!

உள்ளத்தில் அணுசக்தி
உலையைக் கொண்ட
யுகப்புரட்சிக் கவிஞனவன்
கவிதை, கால

வெள்ளத்தைக் குடித்துத்தன்
வேட்கை தீரும்!
விரல்பட்டால் மின்சார
விருந்து வைக்கும்!

அள்ளத்தான் குறைந்திடுமா
ஆழி வெள்ளம்?
ஆண்டுகளால் அவன் வயதை
அளக்க லாமா?

உள்ளத்தால், உதடுகளால்
அளக்க ஒண்ணா
ஊழித்தீ அளக்கப்புல்
அளவு கோலா?

தமிழரசு 16-4-1991



# தமிழுணர்ச்சி தனையெழுப்பு

முதற்சங்கம் இடைச்சங்கம் கடைச்சங் கங்கள்
　　முத்தமிழின் சங்கங்கள்! கூடல் கண்ட
இதழ்ச்சங்கம் எல்லோர்க்கும் பிடிக்கும்! தோழர்
　　எழுச்சிக்குத் தொழிற்சங்கம் தேவை! ஆனால்
இதழ்ச்சங்கம் தமிழ்ச்சங்கம் தொழிற்சங் கங்கள்
　　எனும்வரிசை தனிலெதற்குச் சாதிச் சங்கம்?
இதைச்சங்கம் எனலாமா? இதுவும் சங்கம்
　　எனில், சங்கம் எனும்சொல்லே இழிந்தி டாதா?

நீக்கமறச் சாதிவெறி நிறைந்த இந்த
　　நிலைமைதனைத் தனித்தனியே சங்கம் கண்ட
ஆக்கமெனச் சொல்லுகிறார் சிலபேர்; அந்த
　　அறிவில்லார் தங்களுக்குச் சொல்வேன்: கட்டி
வீக்கமெல்லாம் வளர்ச்சிகளா? புற்று நோயின்
　　விளைச்சலினை வளர்ச்சியென விளம்ப லாமா?
பூக்களெனப் பூத்ததமிழ் மனத்தில் இந்தப்
　　பூநாகம் இனிமேலும் இருக்க லாமா?

சாதியினில் வளர்வதெல்லாம் ஒன்றி ரண்டு
தனிமனிதச் சுயநலங்கள்! போக்கில் லாத
பேதைகளின் தலைமை வெறிப்பித்தால், சாதிப்
பேய்களுக்குக் கும்மாளம் வீதி தோறும்!
கீதைகளாய் இவருரையை நம்பி, மக்கள்
கிளர்ச்சிக்கு நாள்குறித்துக் குதிக்க லாமா?
சாதிகளால் சமர்க்களத்தைப் படைக்க லாமா?
சைத்தானைத் தெய்வமென வணங்க லாமா?

கனவினிலே இதுகண்டேன் எனது மக்கள்
கைகளில்செங் கல்லேந்தி நிற்கக் கண்டேன்
'இனியவரே! தமிழ்த்தாய்க்குப் பெரிய கோயில்
எழுப்புதற்கா இச்செங்கல்' என்று கேட்டேன்
அனைவருமே ஒருகுரலில் சொன்னார், சாதி
ஆதிக்கம் தனைக்காக்கும் கோட்டைக்கென்றார்
'மனிதர்களே! கல்லறைக்குக் கோட்டை என்ற
மறுபெயரும் இருக்கிறதா?' என்று கேட்டேன்.

என்சாதி தனைக்காக்க மற்று முள்ள
எதிர்ச்சாதிக் கொட்டத்தை அடக்கக் கோட்டை
இன்றேநான் கட்டுகிறேன் என்பான், நாட்டை
இடுகாடாய் ஆக்குகிறான்! கட்டும் கோட்டை
தன்சாதிக் கல்லறையே யாகும்! செய்த
தவறுக்குத் தங்கமுலாம் பூசு கின்றான்!
கண்போன்ற தமிழ்மகனே உனக்கேன் இந்தக்
கல்லறைக்குள் சிறைவாசம்? வெளியே வாடா!

காஞ்சியிலே கண்திறந்த தெய்வம் அண்ணா
கண்களிலே செங்குருதி ஒழுக உன்னை
வாஞ்சையுடன் நோக்குகிறான்! தம்பி, நெஞ்சை
வாளாலே அறுக்காதே எனச்சொல் கின்றான்
காஞ்சிநகர்த் தெய்வத்தின் குரல்கே ளாமல்
கல்லறையே போதுமெனச் சொன்னால் உன்றன்
மூஞ்சியிலே வரலாறு காறித் துப்பும்!
'மூடமகன்' எனக்காலம் உன்னை ஏசும்!

கல்லறையைக் காலாலே உதைத்துத் தள்ளு!
கண்களிலே வான்சுடரைக் காண்பாய்! உன்றன்
உள்ளுறையும் தமிழுணர்ச்சி தனையெ ழுப்பு
உலகத்தின் கூரைவரை உயர்ந்து நிற்பாய்!
வெள்ளலைகள் கைநீட்டும் கடலும் உன்றன்
விழியசைந்தால் அசையாது! நெருப்பும் வேர்க்கும்!
உள்ளம்போல் தானுயர்வு என்ப தாலே
ஒன்றுபடு தமிழ்மகனே! உனக்கென் வாழ்த்து!

வாழும் தமிழ் உலகம் மார்ச் 1988



# உனது வசந்தம் வெளியே இல்லை!

வளைந்த வானை நோக்கி நிமிர்ந்து
வளரும் மரங்கள் கோடி
வளைந்த தோளில் மலர்கள் ஏந்தும்
வசந்தப் பாடல் பாடி!

பழைய வேம்பில் புதிய காம்பில்
தளிர்கள் என்ன வண்ணம்!
இளைய கூட்டில் புதிய ரத்தம்
இயற்கை பாய்ச்சும் சின்னம்!

உவகை யோடு உடையை மாற்ற
உலகம் துள்ளும் வேளை
கவிதை நூறு குயில்கள் பாடக்
காதல் கொள்ளும் சோலை!

கரும்பு வில்லும் மலர்கள் அம்பும்
காமன் ஏந்தும் காலம்!
திரும்பும் எட்டுத் திசைகள் எங்கும்
தெய்வம் தோன்றும் நேரம்!

உயிர்களுக்கு வசந்தம் இன்று!
உனது வசந்தம் என்று?
துயர்களுக்குத் துயர் கொடுக்கத்
துணிகி றாயே அன்று!

உனது வசந்தம் வெளியில் இல்லை
உணர வேண்டும் மனிதா!
மனித வசந்தம் என்பதென்றும்
மனதின் வசந்தம் மனிதா!

இரண்டு மாத வசந்த கால
எல்லை இல்லை உனக்கு!
உருண்டு செல்லும் ஆண்டு முழுவதும்
உனது வசந்தக் கணக்கு!

தமிழரசு 16-4-1989



# பற்று

காட்சி மீது வைத்த பற்று—
காத லாகி நின்றது!
காதல் மீது வைத்த பற்று—
கட்டில் நோக்கிச் சென்றது!
கட்டில் மீது வைத்த பற்று—
தொட்டில் ஒன்று தந்தது
தொட்டில் மீது வைத்த பற்று—
தூக்கம் தன்னைத் தின்றது!

உணவு மீது வைத்த பற்று—
உடல்வ ளர்ச்சி கண்டது!
உடம்பின் மீது வைத்த பற்று
ஒப்ப னையைக் கொண்டது!
ஒப்ப னைமேல் வைத்த பற்று—
விற்ப னைக்கு வந்தது
விற்ப னைமேல் வைத்த பற்று—
தப்பி தங்கள் செய்தது!

கொடியின் மீது வைத்த பற்று—
கொள்கை யாகி நின்றது!
கொள்கை மீது வைத்த பற்று—
குருதி சிந்தி வென்றது!
பொடியின் மீது வைத்த பற்று—
புற்று நோயைத் தந்தது!
புற்றின் மீது வைத்த பற்று—
பாலைக் கொட்டிச் சென்றது!

கனவின் மீது வைத்த பற்று—
காரி யத்தைக் கொன்றது!
காரி யத்தில் வைத்த பற்று—
ஈவி ரக்கம் விட்டது!
துணைவி மீது வைத்த பற்று—
தோல்வ ரைக்கும் சென்றது!
தோல்நி றத்தில் வைத்த பற்று—
கருப்பர் வாழ்வைத் தின்றது

சதையின் மீது வைத்த பற்று—
சாத்தி ரத்தை விட்டது!
சாத்தி ரத்தில் வைத்த பற்று—
நேத்தி ரத்தைச் சுட்டது!
சிதையில் இட்ட தீயின் பற்று—
எலும்பை மட்டும் விட்டது!
சீதை மீது வைத்த பற்று—
சிதையில் கொண்டு விட்டது!

பற்று வைக்கக் கூட மக்கள்
கற்று வைத்தல் நல்லது
பற்று கின்ற தேதனை என்ற
படிப்பில் வெற்றி உள்ளது!
முற்றும் விட்ட முனிவர் நெஞ்சும்
ஒன்று பற்றி உள்ளது!
ஒன்றும் விட்ட உயிர்க ளுக்கிவ்
வுலகில் என்ன உள்ளது?

—1991



# தியாகத்தின் நிறம் பழுப்பு

தாக்க வரும் காற்றுத்
தடியர்களால் உதிர்கின்ற
பூக்களே உங்கள்
பொன்மேனி நோகுமென்று,

பழுத்தஇலை உடன்பிறப்பு
பக்குவமாய் முன்விழுந்து
அமைத்திருக்கும் இலைமெத்தை
அவசியத்தை உணர்ந்திருப்பீர்

தியாகத்தின் திருநிறம்தான்;
பழுப்புநிறம் என்பதனை
மகரந்த வார்த்தைகளால்
மனிதருக்குச் சொல்லுங்கள்!

1981



# தேவ மைந்தன்

தேவ மைந்தன் மண்ணில் விண்ணை
அமைக்கத் தோன்றினான்
தெண்டனிட்டுத் தேவ தூதர்
வாழ்த்தத் தோன்றினான்!

மலரில் வீழ்ந்த பனித்துளி போல்
மென்மை யானவன்!
மணியில் வீழ்ந்த கதிரொளி போல்
தூய்மை யானவன்!

புலரும் காலைப் பொழுதைப் போலப்
புனித மானவன்
பூமி எங்கும் மக்களுக்குத்
தாயும் ஆனவன்!

**(தேவமைந்தன்)**

எல்லையற்ற வானம் எங்கும்
பறந்து செல்லுங்கள்
ஏசு மண்ணில் வந்த சேதி
எங்கும் சொல்லுங்கள்

புல்லும் கூட கவிதைபாடும்
வந்து பாருங்கள்!
பூமி மீது மனித சொர்க்கம்
காண வாருங்கள்!

(தேவ மைந்தன்)



# அண்ணல் முகம்மது

சாந்தத்தை ஓதிச் சமாதானம் பரப்பும்
மசூதிப் புறாக்களே உங்களைத்தான் கேட்கின்றேன்!
நீலவெளி வானத்தில் வெண்சிறகுத் துடுப்பசைத்துக்
கோலஎழில் காட்டுகின்றீர் கூறிவிட்டுச் செல்லுங்கள்
பிறைநடுவே தோன்றுகின்ற விண்மீனாய், மக்காவில்
அறைநடுவே ஆமீனா அன்னைமடி தவழ்ந்தவர்யார்?

மண் மட்டும் தானா மனங்கூடப் பாலைவனம்
என்றிருந்த நாட்டுக்குள் எழிற்சோலைகண்டவர்யார்?
ஒட்டகத் துக்கிருந்த உரிமைகளும் இல்லாத
வட்டவிழி மங்கையர்க்கு வாழ்வளிக்க வந்தவர் யார்?

'அழுகைக்குப் பிறந்தவளே அரபுப்பெண்' இதை
மாற்றித்
'தொழுகைக்குப் பிறந்தவள் நீ' எனச் சொன்ன
தூயவர் யார்?
வெளிச்சத்தை என்றோ விவாகரத்து செய்துவிட்ட
குழிகளுக்குள் ஒளிச்சுடரைக் குடியிருக்க வைத்தவர்
யார்?

சீனாவைச் சென்றடைந்தும் சேர்ப்பாய் நீ அறிவை
எனப்
பேனாவின் மைக்கறையைப் பேணிய நற்பெருமான்
யார்?
நெருப்புக்குப் பிறந்தவர் யார்? நிலவுக்குள் சிரிப்பவர்
யார்?
இருப்பவர் யார்? இருந்தவர் யார்? என்றைக்கும்
வாழ்பவர் யார்?

தூங்கிவிடும் மனிதருக்குத் தொல்லோன்புகழ்கூறப்
பாங்குரைக்கும் போது பறக்கின்ற பறவைகளே!
எத்திசையும் நிறைந்திருக்கும் இறையோனின்
அருள்சேர
அத்தர் மணம் கமழ்கின்ற அழகருக்கே
வாழ்த்துரைப்பீர்!

தமிழ்மலர் 1980



# ஞான ஞாயிறு

வங்கத்தின் வார்ப்படமே! பரத கண்ட
வரலாற்றைத் திசை திருப்பும் சக்திமைந்தா
சிங்கத்தின் கம்பீரக் காட்சி யாலே
சிறு நரியைச் சிறுத்தையென ஆக்குந் தீரா!

அங்கத்தில் மானிடன் நீ! அறிவால் அந்த
அமரருக்கும் பெருந்தேவன்!உன்னைப் போற்றத்
தங்கத்தில் நாக்கிருக்க வேண்டும்!நானோ
தாய் தந்த தசை நாக்கால் வாழ்த்து கின்றேன்!

ஒடுங்காத குழியென்னும் வயிற்றில் கொட்டும்
உணவுக்குப் பலர் துறவி யான துண்டு!
அடங்காத மனைவி தரும் அர்ச்சனைக்கே
அஞ்சியதாற் பலர் துறவி யானதுண்டு

கடன்காரன் தொல்லைக்குப் பயந்து தப்பக்
கடைசிவழி இதுவென்று துறந்தோ ருண்டு
திடங் கொண்ட நெஞ்சத்தால் உண்மை காணும்
தீரத்தால் உன்போல் யார் துறவி யானார்!

காலத்தின் மார்பினிலே பதக்கமாகக்
காணுகின்ற பெருஞ்சுடரே! 'ஏழை மக்கள்
ஓலத்தைப் போக்குதற்குத் தொண்டு செய்ய
ஓராயிரம் நரகம் செல்வேன்; வாழ்வின்

மூலத்தைக் காண்பதல்ல சமயம்! ஏழை
முன்னேற உழைப்பது தான் சமயம்' என்ற
ஞாலத்தின் புதுஞானி நீதான்! உன்னை
ஞாயிறெனச் சுற்றுவதால் உலகம் உய்யும்.

விவேகானந்தா கல்லூரி மலர்

# மனித இறைவன்!

எழுதுகோலே கலப்பை என்று
எண்ணி எழுதும் புலவன்!
எவர்க்கும் உணவு படைக்கும் அன்பில்
இனிய அன்னை உழவன்!

கொடிய வறுமைக் கொடுமைத் தீயில்
கும்பி கருகும் பொழுது
கொழுத்த கஞ்சி அதனை ஊற்றி
நெருப்பை அணைக்கும் நிபுணன்!

உயிர்கள் எல்லாம் பிரம்மம் என்று
உதட்டு வேதம் சொல்லும்
உலகில் செயலில் அதனை ஓதும்
உண்மைக் குருக்கள் உழவன்!

பசுமைப் புரட்சிப் படையின் தலைவன்
பயிரைக் காக்கும் மறவன்!
படைக்கும் தொழிலில் இவனும் ஒருவன்
பரிவில் மனித இறைவன்

தலைவன் மறவன் புலவன் இறைவன்
தருந்த பெயர்கள் எனினும்
தரையின் மகளின் கணவன் என்று
தன்னை நினைக்கும் ஒருவன்

கலப்பை தூக்கி உழவன் வந்தால்
கன்னி நிலங்கள் மசக்கை!
கன்னி நிலங்கள் மசக்கை கண்டால்
கவிதை விரிக்கும் இறக்கை!

தாய் 20-1-1991

# உலக நாடுகளே ஒரு சொல் கேளீர்!

உலக நாடுகளே ஒருசொல் கேளீர்:
இருபதாம் நூற்றாண்டின் தலைமாட்டில் நீங்கள்
ஊது வத்தி கொளுத்தி வைக்கும்முன்
பட்டினிச் சாவுக்குக் கல்லறை எழுப்புங்கள்!

இயலா தென்றால்,
இரண்டா யிரத்து ஒன்றிலே இங்கே
மனித மாமிசம் தெருவிலே கிடைக்கும்!
அந்த நாட்களில். சைவர் என்பவர்
மனிதனைத் தவிர மற்றவை உண்பவர்
அசைவர் என்பவர் அவனையும் உண்பவர்!

3-5-1983



# குளிக்க வாரும் ஜெகத்தீரே!

குளத்தை நோக்கிக்
குளிக்கப் போனேன்!

குளத்தில் இறங்கிக்
குளத்து நீரைக்
குனிந்து நோக்கினேன்!

'குளம்எப் போதும்
குளிப்பதே இல்லையே,
குளிக்காத குளத்தில்,
குளிப்பது தேவையா?'

என்ற நினைப்பில்
குளிக்க மறுத்துக்
குளக்கரை ஏறிக்
கொஞ்சம் திரும்பினேன்!

அடடே, கதிரின்
வெளிச்ச வெள்ளத்தில்
குளித்துக்கொண் டிருந்தது
குளமெனக் கண்டேன்!

'கதிர்குளிக் கிறதா?
கண்டவர் உண்டா?'
—மறுபடி ஐயம்!

குளிக்காத கதிரில்
குளம்கு ளிப்பதா?
என்று நினைத்துக்
குளத்தைக் கேட்கக்
குனிந்து நோக்கினேன்,

குளத்தில் கதிரவன்
குளித்துக்கொண் டிருந்தான்!

குதித்தேன் குளத்தில்!
குளித்தேன் கதிருடன்!

ஆமடா தோழா!
ஒருவரும் ஒருவரும்
குளிக்கலாம் என்பதும்,
ஒருவரில் ஒருவர்
குளிக்கலாம் என்பதும்,
உண்மை எனநான்
உறுதி உரைக்கிறேன்!

16-3-1988



# காதல்

காதலைக் குப்பைக்
குழியிலே புதைத்தேன்!
வெறுப்பை உமிழ்ந்தேன்!
வெப்பத்தை வீசினேன்!

காதல்—
வெறுப்பை உறிஞ்சி,
வெப்பத்தைச் சுவைத்து,
காதல்—வேர் விட்டு,
காதல்—துளிர் விட்டு,
காதல்—கிளை நீட்டி,
காதல்—இலை காட்டி,
காதல் காதலாய்ப்
பூத்துக் குலுங்கிக்
காற்று வெளிக்கெல்லாம்
காதலைத் தந்தது!

நான், இப் போது
காதலின் தூதுவன்!

25-6-1982





# பேய் வனத்தில் ஒரு பெண்வசந்தம்!

உலகெரிந்த பின்னாளும் ஆடுகின்ற
உன்மத்தக் காளியிவள் அல்ல! வாழ்க்கை
வளமிழந்த பாலையிலே என்ன ஆட்டம்
வனிதையிவள் ஆட்டத்தில் யார்க்கு நாட்டம்?

மங்கையிவள் மன்மதனின் கொடியா? இல்லை
மாமிசப்பூப் பூத்திருக்கும் செடியா?
கங்கையிலே விடமறந்த படகா? ஆசைக்
கற்பனைக்குக் காமனிட்ட விதையா?

விற்பனைக்கு வந்ததிந்த நிலவு—இது
விற்றுவரும் காமரசக் கனவு!
ஒப்பனைக்கு வந்த உயிர்ப்பாவை—இவள்
உதடுகளால் வெல்ல வேண்டும்சாவை!

மார்பினிலே எத்தனை கம்பீரம்!—அந்த
மான்விழியில் மட்டுமென்ன சோகம்?
யார்வரவைத் தேடுதிந்தக் கொம்பு—உடல்
ஆக்கியதோ தூய்மைசெய்த செம்பு!

பட்டமரம் ஓர் வசந்தம் தேடும்!—இந்தப்
பாவைவிழி யார்வரவை நாடும்?
சுட்டவிதை பூமரமாய் ஆகும்!—ஒரு
சொந்தம்வந்த போது துயர் சாகும்!

பேய்மரங்கள் பூமரங்கள் ஆக—ஒரு
பெண்ணசைவில் பிரம்மன் எழுந்தாட
காய்கனிகள் பூந்தளிர்கள் சோலை—நாம்
காணுகின்ற வேளைவரும் நாளை!

அமுதசுரபி பிப்ரவரி 1986



# கனவு காணும் கனவுகள்

இமைகள் என்னும் கதவுகள்
இறுகமூடும் வேளையில்
அமையும் வெட்ட வெளியிலே
ஆசை தீட்டும் ஓவியம்!

ஊன் சுமந்த கூடுகள்
உறக்கம் என்ற நாட்டிலே
தோன்றிடும் விசித்திரம்
தோலின் பாவை நாட்டியம்!

ஆடையற்ற ஆசைகள்
ஆட்களாக வந்திடும்
மேடையற்ற நாடகம்
மின்னும்வெண் திரைப்படம்!

நான்நடிக்கும் நாடகம்
நானே பார்க்கும் அற்புதம்
ஏன் முடிந்து போனது
எதில் ஒளிந்து கொண்டது?

நிழல் எடுத்து நெய்ததோ!
நெருங்க ஓடும் கானல்நீர்ச்
சுழலிலே ஓர் நீர்க்குமிழ்
சுற்றி மாயும் மாயமோ?

போயும் போயும் கனவிலே
போதை கொள்ளும் மனிதனே
நீயும் கூட கனவடா
நினைக்க நேரம் இல்லையா?

ஊமையான ஆண்டவன்
உள்ளம் காணும் கனவுதான்
பூமிவாழ்க்கை! நாமெலாம்
புலம்புகின்ற பாத்திரம்!

எந்த நாள் வரை இருக்கும்
　　இறைவன் தூக்கம், அதுவரை
இந்த ஞாலம், இந்த வாழ்வு
　　எனும் கனாக்கள் நீளலாம்!

போயும் போயும் கனவிலே
　　போதை கொள்ளும் கடவுளே!
நீயும் கூட கனவடா
　　நினைக்க நேரம் இல்லையா!

அமுதசுரபி—வசந்தமலர் 1987



# வியர்வையில் ஒரு விதி எழுது!

வியர்வையி னாலொரு விதிஎழுது!
விண்ணிலும் மண்ணிலும் அதைஎழுது!
உணவைத் தொடுகிற தனிஉரிமை
உழைக்கிற கைக்கே எனஎழுது!

உலகம் உண்கிற உப்பெல்லாம்
உழைப்பவர் வியர்வை வழங்குவது
உலகப் புதுமையின் ஆதாரம்
ஒளிதுளி வியர்வையில் அடங்குவது

பனிமலை வியர்க்கும் பொழுதினிலே
பாகீ ரதிகள் கருவாகும்
மனிதர்கள் வியர்க்கும் பொழுதினிலே
மாபெரும் உலகம் உருவாகும்!

கல்லைப் படைத்தவன் கடவுளென்றால்
கடவுளைப் படைத்தவன் மனிதனடா!
மண்ணைப் படைத்தவன் பிரம்மனென்றால்
மதுரையைப் படைத்தவன் தமிழனடா!

வேர்கள் நமக்குச் சொந்தமென்றால்
விழுதுகள் நமக்கென்ன உறவில்லையா?
வேர்வை நமக்குச் சொந்தமென்றால்
விளைகிற பயனில் தொடர்பில்லையா?

வெற்றிக்கும் உழைப்புக்கும் திருமணமாம்
வியர்வைக் குழந்தைகள் பிரசவமாம்
நெற்றியின் வியர்வையை விரலில்வழி
நீள்புவி இவர்க்கென உயிலெழுது!

தாய் 20-11-1983



# தமிழகத்துக்கு வாங்க!

தமிழகத்துக்கு வாங்க!—எங்கள்
தாயகத்துக்கு வாங்க!
அமைதிப் பூங்கா அழகு!—இதன்
அன்பில் மகிழும் உலகு!

ஆடற்கலையின் சிறப்பை—கலை
அதிசயங்களின் பிறப்பை
பாடற்கலையின் பரப்பை—இங்கு
பார்க்க லாங்க வாங்க!

தஞ்சை, வேளாங்கண்ணி,—தமிழ்
மதுரை, நாகூர், பழனி
கொஞ்சும் தெற்குக் குமரி—இங்கு
கோயில் பார்க்க வாங்க.

பிச்சாவரம் காடு—அதைப்
பிளக்கும் நீரின் ஊடு
உற்சாகமாய்ப் படகு—அதில்
ஓட்டலாங்க வாங்க!

சிதம்பரமெனும் தில்லை—கலைச்
சிறப்புடையது மல்லை!
விதவித வகைப்பறவை—வரும்
வேடந்தாங்கல் வாங்க!

நீலக்கம்பளம் போர்த்தாள்—உடல்
நிறைய வாசம் சேர்த்தாள்!
வாலைக்குமரி உதகை—அவள்
வனப்பைப் பார்க்க வாங்க!

வெள்ளை நிலவை உருக்கி—நீர்
வீழ்ச்சி யழகைப் பெருக்கி
கொள்ளையிளமை கொழிக்கும்—திருக்-
குற்றாலத்துக்கு வாங்க!

முதுமலைப்பெரு வனமே—அதில்
முழங்கும் யானை தினமே!
புதுமைக் கோடைக் கானல்—அந்தப்
பொழிலைப் பார்க்க வாங்க!

சீரகச் சம்பாச்சோறு—உடன்
சிறந்த மிளகின் சாறு
ஊருக்கு ஊரு 'மோட்டல்'—நல்ல
உபசரிப்புக்கு வாங்க!

முறுக முறுகத் தோசை—அதில்
முழு உலகுக்கும் ஆசை!
வருக வருக பயணி—உங்க
வாய்க்கு உண்டு இளநீர்.

தமிழரசு—16-3-1991



# எங்களன்னை பாரதம்

ஒன்று வானம் ஒன்று ஞாலம்
ஒன்று மக்கள் தம்குலம்
ஒன்று தெய்வம் ஒன்று நீதி
என்று வாழும் பாரதம்!

இன்று நேற்று நாளை என்ற
எல்லை நீத்த கன்னியாய்
நின்று காக்கும் எங்கள் அன்னை
நீடு வாழ்க வாழ்கவே!

கங்கை என்னும் மங்கை யோடு
கன்னி எங்கள் காவிரி
பொங்கு கின்ற போது நெஞ்சில்
பூக்கள் சிந்தும் பூங்கொடி!

தங்கம் வெள்ளி முத்து வைரம்
தந்து கற்பு மாதர்கள்
அங்கம் எங்கும் பூட்டு கின்ற
அன்னை வாழ்க வாழ்கவே!

நீற ணிந்த நெற்றி பக்கம்
நிற்கும் வைண வக்குறி
சீர ணிந்த சிலுவை யோடு
சேரும் நல்ல வெண்பிறை
பார றிந்த சமயம் யாவும்
பார்த்த றிந்த பைங்கிளி
வீற ணிந்த சக்தி யாக
விளங்கும் அன்னை வாழ்கவே!

நூறு வண்ணம் நூறு தோற்றம்
நூறு நாட்டு மானுடம்
சேரும் வண்ணம் ஒன்று சேர்க்கும்
சிந்தை கொண்ட சேயிழை
நூறு எண்ணம் நூறு கொள்கை
நூறு நூறு தத்துவம்
கூறும் மக்கள் கூடி வாழ்த்தும்
கோதை வாழ்க வாழ்கவே!

மலை குடைந்து குகைகு டைந்து
மாந்தர் தேவர் போற்றவே
சிலைக டைந்து பெருமை பெற்றுச்
சிறந்து நிற்கும் பொன்மகள்
கலைக டந்த கலைகள் தந்து
கலையில் வாணி யானவள்
அலைக டந்த புகழ்ப டைத்த
அன்னை வாழ்க வாழ்கவே!

உரைக டந்த உலக ஞான
உரைகள் தந்த உத்தமி
சிறைகி டந்த போதும் வேதம்
செய்ய வல்ல வித்தகி
நரைக டந்து திரைக டந்து
நாளும் கன்னி யானவள்
வரைக டந்த புகழ்ப டைத்து
வாழும் அன்னை வாழ்கவே!

பொய்ம ணக்கும் சாத்தி ரத்துப்
புலமை நஞ்சு போகவே
நெய்ம ணக்கும் ஞான வேள்வி
நித்தம் நித்தம் செய்பவள்
கைம ணக்க நல்ல றத்துக்
காப்பி யங்கள் செய்பவள்
மெய்ம ணக்கும் வாசகத்து
மேதை அன்னை வாழ்கவே!

என்று தொட்டு நீல வானை
இமயம் தொட்டு நின்றதோ
அன்று தொட்டு வானை ஆயும்
அறிவு தந்த பரொளி
அன்று தொட்டு யாரும் பார்க்க
அஞ்சும் சாக ரத்தையும்
இன்று தொட்டுப் பார்த்து வென்ற
எங்கள் அன்னை வாழ்கவே!

கூற்று நின்ற போதும் வெற்றி
கொண்டு நிற்கும் நாயகி
தோற்ப தாகப் பகைவர் முன்னர்
தோற்றம் செய்யும் பொற்கொடி
சீற்ற மின்றி இதழி னோரம்
செய்யும் புன்ன கைக்குளே
ஆற்றல் மிக்க பகைவர் சாய்க்கும்
அன்னை வாழ்க வாழ்கவே!

நீல வெள்ளம் அதிர்சு ழன்று
போகும் சின்ன தூறுபோல்
ஞால மக்கள் நாலுதிக்கும்
நாளும் செல்லக் கண்டவள்!
கால வெள்ளம் செல்லும் அந்தக்
காட்சி கண்டும் மேருபோல்
மூல வெள்ளக் கரையின் ஓரம்
ஓங்கும் அன்னை வாழ்கவே!

எங்கள் தேசம் எங்கள் தேகம்
எங்கள் ஆவி பாரதம்
எங்கள் மூச்சு எங்கள் பேச்சு
எங்கள் வாழ்வு பாரதம்
எங்கள் அன்னை எங்கள் தந்தை
எங்கள் தெய்வம் பாரதம்
எங்க ளோடு நாங்க ளாகி:
என்றும் வாழும் பாரதம்

அமுதசுரபி தீபாவளி மலர் 1987





# மோனாலிசாவுக்கு முறுவல் சொல்லித் தந்தவளே!

*நீலக் கருங்குயிலே*
*நின்றிருக்கும் ஓவியமே!*
*ஏழைத் தமிழ்மகளே*
*எதைப் பார்த்து நீ சிரிச்ச!*

உள்ளூரு வாத்தியாரு
உன்னைப் படிக்க வா என்று
பள்ளிக்கு அழைக்கையிலே
பார்த்துச் சிரிச்சாயோ!

கோரை முடி வாரிவிடக்
கொஞ்சம் கூட எண்ணயில்லை
பாரமுள்ள பை தூக்கப்
பள்ளிக்கூடம் போறதெப்போ!

ஆத்தாளுக்குப் பிள்ளைதூக்க,
அப்பனுக்குச் சோறுதூக்கக்
காத்திருக்கும் சின்ன பொண்ணு
கல்வி கற்கப் போறதெப்போ

கனவுல தான் பள்ளிக்கூடம்
கற்பனையில் என் படிப்பு
என நெனச்சுச் சிரிச்சாயோ
இளங்காலைச் சூரியனே!

சட்டை கிழிஞ்சிருந்தா
சடுதியிலே தச்சிடலாம்
சமுதாயம் கிழிஞ்சிருக்கே
தைக்கக் கொஞ்சம் நாளாகும்!

மோனாலிசாவுக்கு முறுவல்
சொல்லித் தந்தவளே!
வேணாண்டி ச்சிரிப்பு
வேதனையைக் கூட்டாதே!

புகைப்படக் கவிதை பொன்மலர் நவ-டிச-1990





# வாழ்க்கையின் மூன்று முகங்கள்!

மரணத் துக்கோர் ஆயிரம் முகங்கள்
வாழ்க்கைக் கொருமுகம்தான்!—மிக
முரண்பா டான மூவகை முகங்கள்
வாழ்க்கைக் கிருப்பதுமேன்?

வானும் காற்றும் சீறியெ ழுந்தால்
 வாழ்க்கை அழிவதில்லை!—ஒரு
மானுடன் மேலே மானுடன் விழுந்தால்
 மறுபடி எழுவதில்லை!

மண்ணுக் குள்மறு வாழ்வைப் பார்க்கும்
 பெண்ணைப் பார்மகனே!—நீ
கண்ணுக் குக்கண் தோண்ட நினைத்தால்
 காலனின் தூதுவனே!

இராணுவம் என்பது காக்கும் கரமா?
 நிச்சயம் கிடையாது!—நம்
மானுட சாதியைப் பிரிப்பதில் இதுபோல்
 மதிலே கிடையாது;

துண்டுக ளானது மனமா இல்லை
 கல்லும் மரமும்தான்—ஒரு
துன்பக் கதையின் பின்னே வருவது
 வாழ்வின் தொடர்கதைதான்!

கட்டட வாழ்க்கை அழியும்!—வாழ்க்கைக்
 கட்டடம் அழியாது!—ஒரு
கடைசிப் பிரளயம் வந்தாலென்? உயிர்க்
 காவியம் அழியாது!

தாய் சித்திரைச் சிறப்பிதழ்
18-4-1982



# விடிவை நோக்கி

கருப்பைக் குள்ளே
கனத்த இருட்டு
கனத்த இருட்டில்
கால் மேலாகத்
தலை கீழாகத்
தவத்தில் நின்றேன்
விடிவை நோக்கி

பிரசவ வேதனை
அன்னைக் கேற்படப்
பிறந்தேன்; அந்தப்
பிறப்பே எனக்கு
விடிவென்றிருந்தேன்

விடிவை நோக்கி
வருவதாய் எண்ணி,
சின்ன இருட்டிலே
சிறைப்பட்டுக் கிடந்தவன்
பெரிய இருட்டுக்குப்
பெயர்ந்து வந்திருக்கிறேன்.
இடம் மாற்றம் நடந்தது
இருள் மாற்றம் நடக்கவில்லை!

கபாலத்துக் குள்ளே
கனத்த இருட்டு
கல்வி விளக்கை
ஏற்றி வைத்தார்கள்
விடிவை நோக்கி!
கல்வி விளக்கோ
இருட்டின் அடர்த்தி
எவ்வள வென்று
காட்ட மட்டுமே
கைவிளக் கானது!
மீண்டும் இருட்டிலே
என்னைத் தொலைத்தேன்

இதயம் முழுவதும்
தனிமை இருட்டு
இருப தாண்டுகள்
இப்படிக் கிடந்தேன்
விடிவை நோக்கி!
கன்னி விளக்கைக்
கொண்டு வந்தார்கள்
வந்தது விடிவு
என்று நினைத்தேன்.

காதல் விளக்கோ
விடிவைத் தராமல்
வெளிச்ச முக்காட்டை
இருட்டுக்குப் போட்டு
வேடிக்கை பார்த்தது.

விடிவு எப்போது
விளக்குமா என்று
தத்துவ நூல்களைத்
தடவிப் பார்த்தேன்!

அவைகள் சொல்லின
இருள் எனப்படுவது
எள்ளைப் போன்றது.
இரவு முழுவதும்
இருளை ஊறவை!
காலையில் பிதுக்கு;
கதிர்என்னும் பருப்பு
கண்ணைத் திறக்கும்
அதுதான் விடிவு
என்று பகர்ந்தன.

வெளிச்சப் பருப்பின்
கருப்புத் தோலே
இருள் எனும் விஷயம்
எனக்குப் புரிந்தது!
விடிவு மட்டும்
எங்கோ இருந்தது!

இருட்டில் கிடந்தேன்
இறப்பே விடிவு
என்று இப்போது
எண்ணத் தொடங்கிக்
காலன் வரவுக்குக்
காத்துக் கிடந்தேன்

திடீரென ஒருநாள்
'இருள் என்றால் என்ன?'
சிந்திக்கத் தொடங்கினேன்;

உடனே எனக்குள்
வெளிச்சம் வந்தது
விடியல் என்பது
வெளியே இல்லை
என்று புரிந்தது!

உள்ளுக்குள் விடிந்தால்
உலகுக்கு விடியும்
இதுதான் விடிவு
என்பதென் முடிவு.

1990



# பிரபஞ்ச வெற்றி

ஒருகணத்தில் பலயுகத்தை ஒடுக்குவோம்—சுண்டு
விரல்நகத்தில் பலஜகத்தை அடுக்குவோம்
இருளனைத்தும் விழியசைப்பில் அடக்குவோம்—சின்ன
இலைநுனிக்குள் அதனைவைத்து மடக்குவோம்!

வானமீனை உலையிலிட்ட சோற்றிலே,—அந்த
வானகங்கை நீரில்வைத்த சாற்றிலே,
மானுடத்தை ஊட்டுமெங்கள் ஆற்றலே—எந்த
மறைகளுக்கும் பெருமைஎம்மைப் போற்றலே!

பாரதி கலைக்கழகக் கவிமலர் 1989



# பதிப்பாளர் பக்கம்

கவியரசரின் கவிதைகளைத் தொகுத்து வெளியிடுவதற்காக 'வெண்ணிலவு'—என்னும் வெளிச்சப் பதிப்பகம் தொடங்கப் படுகிறது. உங்களின் ஆதரவோடு, இனி ஒவ்வொரு நூலாகக் கவியரசரின் படைப்புகள் வெளிவரும் முன்பு வெளிவந்துள்ள நூல்களின் புதிய பதிப்புகளும் கொண்டு வரப்படும்.

மிகுந்த பொருளிடர்ப் பாடுகளுக்கிடையில் மலருகின்ற இந்த முயற்சிக்கு ஊக்கம்தர வேண்டியது உங்கள் கடமை.

கவியரசரின் படைப்புகளை முன்னர் வெளியிட்டிருக்கிற இளையோர் செம்மல், வார்த்தைச் சித்தர் வலம்புரியாரின் கவிதா பானு பதிப்பகத்துக்கும், வரலாறு படைக்கும் பதிப்புச் செம்மல் திருநாவுக்கரசு செட்டியார் அவர்களின் வானதி பதிப்பகத்துக்கும் எங்கள் வளமார்ந்த நெஞ்சின் வற்றாத நன்றியை உரித்தாக்குகிறோம்.

எங்கள் இலக்கிய முயற்சிகளுக்குத் துணை நிற்கும் ஆவடி நாசரேத் மெட்ரிகுலேசன் பள்ளி முதல்வர் திரு. எஸ். டேவிட் அவர்களுக்கும் மருத்துவத் தம்பதியர் திரு. இராதாகிருஷ்ணன், திருமதி இராசலட்சுமி இருவர்க்கும் எங்கள் நன்றி.

இந்த நூலை உருவாக்குவதில் உதவிய, ஒத்துழைத்த கீழ்க்காணும் அன்பர்கள்—நிறுவனங்களுக்கும் எங்கள் நன்றியைக் குறித்து வைக்கிறோம்.

ஸ்ரீ கோமதி அச்சகம்
எலிகண்ட் பிராசஸ்
ஓவியர் கோபன்
திரு. வ. விசயரங்கன்
திரு. தேவராஜன் (தாடண்டர் நகர்)
திரு. பின்னலூர் மு. விவேகானந்தன்
திரு. எஸ். பாஸ்கர் (கவிதை உறவு)
தீனன் என்ற என். எல். தீன தயாளன்
திரு. கொடைக்கானல் காந்தி
செல்வி மு. அழகு மலர்
செல்வன் மு. கண்ணப்பன்
செல்வன் மு. இராம்குமார்

மற்றும், கவியரசரின் நண்பர்களுக்கும், கவிதைச் சுவைஞர்களுக்கும் எங்கள் நன்றி.

வாழ்த்துங்கள்,
வளர்கிறோம்!

வெண்ணிலவு பதிப்பகம்
28A, ஆர்க்காடு முதலி தெரு,
தியாகராயர் நகர்,
சென்னை - 600 017,
தமிழ்நாடு

தங்களன்புள்ள,
மு. சந்திரகாந்தி

## கவியரசர் இளந்தேவன்....

தமிழுக்குக் காலம் வழங்கியிருக்கிற கொடை.

—மாண்புமிகு அமைச்சர் இராம. வீரப்பன்

இதுதான் கவிதை! இவர்தான் கவிஞர்!

—கவியரசு கண்ணதாசன்

சொற்களுக்குள் சிறைப்பிடிக்கப்பட்ட கவிதா தேவியின் கந்தர்வ ஆன்மாவை மீட்டுத் தமிழ்மக்கள் மீளத் தந்தவர்.

—தவத்திரு பாலமுருகனடிமை அடிகளார்

எல்லோரும் ஒருமுறை எழுந்து நில்லுங்கள்! நமது தலைமுறைக் கவிஞன் இளந்தேவன் நம்மைக் கடந்து போகிறான்.

—வார்த்தைச் சித்தர் வலம்புரிஜான்

எனக்குப் பிறகு எழுதிய கவிகளில் என்னைக் கவர்ந்த கவிஞன் இளந்தேவன்.

—கவியரசு நா. காமராசன்

இதய நாயகன் இலக்கிய வேந்தன்
எங்கள் இளந்தேவன்—என்றும்
மக்கள் தலைவர் மனதில் நிறைந்த
மாண்புறு கவிவாணன்

—அன்புத்தென்றல் எஸ். டேவிட்